# Colgate Dr. Rabbit's Puzzle

Smita has an appointment for her dental checkup.
Can you find the way for her in 20 seconds or less ?

START

SCHOOL

DENTIST

FINISH

BOOK STORE



An Amazing Trip!



Colgate

Bright Smiles, Bright Futures™





# அம்புலிமாமா

டிசம்பர் 1999

## பொருளடக்கம்

மதிமுகம் : 102 புன்னகை : 4







குருதட்சிணை கிடையாதா? 25



41
ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள்




Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai-600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai-600 026. Editor: Viswam


தனிப்பிரதி ரூ. 10.
வருட சந்தா ரூ.1

THE MOST
ENDEARING
GIFT
YOU CAN
THINK OF
FOR YOUR
NEAR AND DEAR ONES
FAR AWAY



# CHANDAMAMA

GIVE THEM
A
MAGAZINE
IN THE LANGUAGE
OF THEIR CHOICE

ASSAMESE, BANGLA, ENGLISH, GUJARATI, HINDI, KANNADA, MALAYALAM, MARATHI, ORIYA, SANSKRIT, TAMIL AND TELUGU

*AND LET THEM ENJOY THE WARMTH*
OF THE HOME AWAY FROM HOME

## SUBSCRIPTION

BY AIR MAIL TO ALL COUNTRIES

Six issues Rs. 300
Twelve issues Rs. 500
by surface mail within India
Twelve issues Rs. 120

Send your remittances
by Demand Draft or Money Order
favouring 'Chandamama India Limited'

to:

PUBLICATION DIVISION
DAMAMA INDIA LIMITED
UILDINGS, VADAPALANI, CHENNAI-600 026






Founded by
CHAKRAPANI
B. NAGI REDDI
Editor
VISWAM
Editorial Advisors
RUSKIN BOND
MANOJ DAS
Designing & Technical Advisor
UTTAM
Publisher
B. VISWANATHA REDDI
Director Marketing
V. MADHUSUDHAN

**HEAD OFFICE**
Chandamama Buildings
Vadapalani, Chennai-600 026
Tel: 4841778 Fax: 4835298

**OTHER OFFICES**
BHUBANESWAR
116-B, B.D.A, Duplex House
Baramunda
Bhubaneswar-751 003
Orissa. Phone:450 534
DELHI
Flat No. 415, 4 th Floor
Pratap Bhawan
5, Bahadurshah Zafar Marg
New Delhi-110 002.
Phone: 2270199
MUMBAI
Nav Bhavna Co-op. Society Ltd.
IInd Floor, D-20
Near Siddhi Vinayakar Temple
Veer Savarkar Marg, Prabhadevi
Mumbai-400 025
Phone: 4370118, 4373251



# கை கோர்த்துச் செல்வோம்

'அம்புலிமாமா! நீங்கள் எங்கே?' என்று பலர் உரத்த குரலில் கேட்க, வேறு பலர் மௌனமாக பத்திரிகை விற்பனை நிலையங்களிலும் தபால்காரர்களின் கரங்களிலும் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அம்புலிமாமாவும் உங்களைப்போலவே உங்களிடம் வந்தடையத் துடித்துக் கொண்டிருந்தது, நீங்கள் அதனைத்தவறவிட்டது போல அதுவும் உங்களைத் தவறவிட்டது.

ஆகா! மீண்டும் அது உங்களிடையே இருப்பதில் தான் எவ்வளவு மகிழ்ச்சி! குழந்தைகளுக்காக அர்ப்பணிக்கப்பட்ட நாளான ஜவஹர்லால் நேருவின் பிறந்த தேதியான நவம்பர் 14ல் அது மீண்டும் வெளிவருகிறது.

அம்புலிமாமா பாசத்துடனும், நேசத்துடனும் முழுஈடுபாட்டில் புதிய நூற்றாண்டில் புதிய அம்சங்களுடன் உங்களிடம் இருக்கும். இந்த இதழிலேயே அந்தப்புதிய அம்சங்களை பற்றிய அறிவிப்பை நீங்கள் காணலாம்.

அம்புலிமாமா இப்புதிய நூற்றாண்டில் உங்களை வாழ்த்தி உங்களோடு கைகோர்த்துச் செல்ல வந்துள்ளது.






## உலகின் பெரிய ஜனநாயகம் முன்னேறுகிறது

இந்தியா வெற்றிகரமாய் பொதுத் தேர்தலை நடத்தி முடித்தது. இது சுதந்திர இந்தியாவின் வரலாற்றில் 13வது பொதுத் தேர்தல். இது செவ்வனே நடந்ததற்கு நம் பிரதமமந்திரியையும் அவரது அமைச்சரவையையும் நாடாளுமன்ற உறுப்பினர்களையும் வாழ்த்துவதோடு இதற்குக்காரணமான பொது மக்களையும் பாராட்டுகிறோம்.

தேர்தல் ஒரு புதிய மக்களவை உருவாகிறது. மாநிலங்களின் அவையும் இந்த மக்களவையும் சேர்ந்தது தான் நாடாளும் மன்றம். மக்களவை ஐந்து வருடகாலம் இருக்க தேர்தெடுக்கப் படுவது. அந்தக் கணக்கின்படி இருந்திருந்தால் இப்போது 10வது பொதுத்தேர்தல் தான் மக்களவைக்கு நடந்திருக்கும். ஆனால் அத்தேர்தல்கள் அதிகரித்ததற்குக் காரணம் சில மக்களவைகள் தம் முழுமைக் காலமான ஐந்து ஆண்டுகள் நீடித்து இருக்க இயலாமல் போனதே. மேலும் மக்களவையில் தனியொரு அரசியல் கட்சிக்கு பெரும்பான்மை தேர்தலில் கிடைக்காமல் போனதே காரணமாகும். இதனால் நிலையான அரசுகள் அமைக்க முடியாது போயின.

ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்று 1947ல் இந்தியா சுதந்திர நாடாகியது. இப்படி சுதந்திரம் அடைய நாடு பெரும் இழப்புகளை ஏற்க வேண்டியதாயிற்று. ஆயிரக் கணக்கான மக்கள் மதக் கலவரங்களில் கொல்லப்பட்டனர். நாட்டின் ஒரு பகுதி பிரிந்து பாகிஸ்தான் என்றப்புதிய நாடு உருவாகியது.

## ஜெர்மன் இலக்கிய மாமணி

இலக்கியத்திற்கான 1999க்கான உலக நோபல் பரிசு ஜெர்மானிய எழுத்தாளரான குயுண்டார் கிராஸ் என்பவருக்கு கிடைத்துள்ளது. இவர் டான்ஜிங்கில் 1927ல் பிறந்தார்.

இவரது நாவல்களில் டின்ட்ரம்' என்பது பெயர் பெற்றதாம். ஆஸ்கார் என்ற குள்ளன் உலகை எவ்வாறு நோக்குகிறான் என்று இப்புதினத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. ஆஸ்காரின் அறிவும், உணர்ச்சிகளும் ஒரு சிறுவனின் வளர்ச்சியில் உள்ளது போல வளர்ந்தாலும் அவன் ஒரு குழந்தை போல இருப்பதாகவே வர்ணிக்கப்பட்டிருக்கிறான். அவன் ஒரு குழந்தை போல ஒரு தகரத்தம்பட்டத்தை ஹிட்லர் தலைமையில் ஆட்சி புரிந்த நாஜிகளின் உயர்வின் போதும் தாழ்வின் போதும் அடித்துக்காட்டுகிறான்.

இரண்டாவது உலகப்போர் 1945ல் முடிவுற்ற போது ஆஸ்காரின் அவயங்கள் முழு வளர்ச்சி பெறலாயிற்று. ஆனால் மறுபடியும்

இந்தியா இன்று உலகின் மிகப் பெரிய ஜன நாயக நாடாகத்திகழ்ந்து கொண்டிருக்கிறது. இந்தியமக்களும், அரசியல்வாதிகளும் மேலும் தேசப் பற்றுடன் கடமையுணர்வுடன் செயல்பட்டால் இந்தியாவானது பொருளாதாரம், கல்வி, தொழில் ஆகிய துறைகளில் மேலும் முன்னேற்றம் காணமுடியும். ஆசிய முன்னேற்ற வங்கியின் கணிப்பின்படி இந்தியாவில் நிலையான அரசாங்கம் இருந்தால் 2000-ம் ஆண்டில் இந்தியா மிக உயர்வான முன்னேற்றத்தை அடையலாம் என்று கூறப்படுகிறது. எனவே, மக்களும் அரசாங்க அதிகாரிகளும் அரசியல்வாதிகளும் நாட்டு நலனைக் கருத்தில் கொண்டு செயல்பட்டால் நம் நாடு நன்கு முன்னேறிவிடும்.



---

தடைப்பட்டுவிடுகிறது. அவனது எதிர்பார்ப்பு நல்ல மனிதத்தன்மை. அது நடக்கவில்லை. இவ்வாறு தொங்கு நிலையில் நாவல் முடிகிறது. ஏதோ ஒரு அமைப்பில் சிறையில் அடைக்கப்பட்ட கைதி போலிருந்த ஆஸ்கார் விடுதலை செய்யப்படுகிறான். ஆனால் எங்கே போவது என்ன செய்வது என்று அவனால் தீர்மானிக்க முடியவில்லை. அவன் தன் தம்பட்டதைத் தட்டிக்கொண்டு அந்த ஒலி செல்லும் வழியே செல்கிறான்.



இவரது இன்னொரு நாவல் 'திப்ளௌண்டர்' இது கற்காலத்தில் ஆரம்பித்து தற்காலத்திற்கு வந்து முடிவடைகிறது. ஒரு மீனவனின் நோக்கில் நாகரீகத்தை இதில் காண்கிறோம். அம் மீனவன் ப்ளௌண்டர் என்ற மீனால் அறிவு முதிர்ச்சி பெறுகிறான். உலகப்படைப்பின் மாறுதல்களையும் அதில் ஆணும் பெண்ணும் தன் ஆதிக்கத்தை நிலை நாட்ட முயல்வதையும் உணவு தயாரிப்பதில் புதுமையையும் இந் நூல் விவரிக்கிறது.

கிராஸ் ஒரு முறை இந்தியாவிற்கு வந்திருக்கிறார். கல்கத்தாவில் ஒரு நாடகத்தின் இயக்குனராகவும் இருந்திருக்கிறார். இலக்கியத்திற்கான நோபல் பரிசைப்பெறும் ஆறாவது ஜெர்மானியர் இவர்.



# அம்புலிமாமா

அன்புமிக்க வாசகர்களே! ஆதரவாளர்களே! நலம் கோருவோரே!

நான் இக்கடிதத்தை உங்களுக்கு மகிழ்ச்சியும் சற்று வருத்தமும் கலந்த அதிசய உணர்ச்சியில் எழுதுகிறேன். உங்களது நண்பன் அம்புலிமாமாவை மீண்டும் கொண்டு வருவதில் மகிழ்ச்சியே. ஓராண்டிற்கு மேலாக இதனை நீங்கள் அடைய முடியாமல் செய்துவிட்டோமே என்பது தான் எம் வருத்தம்.

இதனை வெளிக்கொண்டுவருவதில் ஏற்பட்ட சிரமங்களைப்பற்றிக் கூறி உங்கள் பொறுமையை நான் சோதிக்கப் போவதில்லை. உங்களுக்கு ஒளிகாட்டி மகிழ்ச்சி தரும் உங்கள் இப்பத்திரிகை மீண்டும் உங்கள் கைகளில் இருப்பதே ஆண்டவனின் அருளால்தான். ஒரு உயரிய பணியாக இந்தியக் குழந்தைகளுக்குத் தம் தாய்மொழிகளில் மகிழ்ச்சியளிக்கும் விதத்தில் பயனுள்ள படைப்புகளை அளிப்பதோடு ஆங்கிலத்திலும், சமஸ்கிருதத்திலும் இவற்றை அளிக்கிறோம். பல்வேறு மொழிகளைப்பேசி பல்வேறு பகுதிகளிலுள்ள சிறுவர்களின் கனவுகளை இவை நனவாக்குகின்றன.

மனித உலகில் ஆண்டவன் அருள் நல்லாசிபெற்ற மனிதர்கள் வாயிலாகவே கிட்டுகிறது. 'அம்புலிமாமா'விற்குக்கிடைத்த நல்லாசிபெற்ற உயரிய மனிதர் தாம் திரு. வினோத் சேத்தி என்பவர். இவர் பல புதுக்கருத்துக்களைக் கொண்ட தொழிலதிபர். அம்புலிமாமாவை பெரிதும் விரும்பி நேசிப்பவர். அவ்ரை நான் பாராட்டுவதுடன் அவரது புதிய கருத்துக்களுடனான இச்சேர்க்கை குழந்தை இலக்கியத்தில் மகத்தான இடம் பெறுமென உறுதி கூறுகிறேன்.

இப்பத்திரிகை நல்ல பல்வித விஷயங்களைக் கொண்டும் வண்ணப்படங்களுடன் கம்பீரதோற்றத்தில் மிளிர்ந்து வெளிவரும். இது காம்பேக்ட் டிஸ்க் போன்ற எலெக்ட்ரானிக் பதிப்புகளாகவும் கிடைக்கும். இது போன்ற விவரங்களை உரிய சமயத்தில் அறிவிக்கிறோம்.

இப்பதிப்புகளின் நிர்வாகத்தின் சார்பில் அம்புலிமாமாவும் அதன் மற்றமொழிப் பதிப்புகளும் தம் பணிகளை மாறிவரும் காலத்திற்கு ஏற்ப தனித் தன்மையுடன் தொடர்ந்து பணிபுரிந்து வருமென நானும் என் சக நிர்வாகிகளும் உறுதி கூறுகிறோம்.

உங்களன்புள்ள

B. Viswanatha Reddi

பதிப்பாளர்.

## மூன்றாவது முறையாகப் பிரதம மந்திரி

திரு. அடல் பிஹாரி வாஜ்பாய் அக்டோபர் 13-ல் பிரதம மந்திரியாக மூன்றாவது முறை பதவிப்பிரமாணம் செய்து அமைச்சரவையை அமைத்தார். முதல் முறை பிரதமமந்திரியாக 1996 மே மாதத்திலும், அதன் பின் 1998 மார்ச்சில் 18 கட்சிகள் கொண்ட கூட்டணியின் தலைவராகி பிரதம மந்திரி பதவியை ஏற்றும் இருந்தார். அதன் பின் 13வது மக்களவைக்கு செப்டம்பரில் தேர்தல் நடக்கவே அவரது கட்சியான பாரதீய ஜனதா கட்சியும் மற்றும் 22 கட்சிகளும் சேர்ந்து தேசிய ஜனநாயகக் கூட்டணி என்ற பெயரில் தேர்தலில் போட்டியிட்டு மக்களவையின் 540 இடங்களில் 300 இடங்களைக் கைப்பற்றியது. இது நல்லதொரு பெரும்பான்மையாக ஆகியது.

இளைஞராக இருக்கையில் திரு.வாஜ்பாய் மாணவர் இயக்கத்தில் கலந்துகொண்டு 1951ல் திரு.சியாம் பிரசாத் முகர்ஜீ ஆரம்பித்த ஜன சங்கக் கட்சியில் சேர்ந்தார். 1957ல் நடந்த மக்களவைத்தேர்தலில் வெற்றிபெற்ற நான்கு ஜன சங்க உறுப்பினர்களில் இவரும் ஒருவராவர். 1962 தேர்தலில் இவர் வெற்றி பெறாவிடினும் 1967, 1971, 1977, 1980 ஆகிய ஆண்டுகளில் நடந்த தேர்தல்களில் குவாலியரில் வேட்பாளராக நின்று வெற்றிபெற்றார். 1884ல் அவர் அங்கு வெற்றிபெறாது போயினும் 1989ல் லக்னௌவிலும் விதிஷாவிலும் நின்று இரு இடங்களிலும் வெற்றி பெற்றார். 1991, 1996, 1998 ஆகிய ஆண்டுகளில் லக்னௌவில் நின்று வெற்றிபெற்றதோடு இந்த ஆண்டிலும் அங்கு இவர் வெற்றி பெற்றார். திரு மோரார்ஜிதேசாய் 1977ல் தமது அமைச்சரவையில் இவரைச் சேர்த்துக் கொண்டு அயல்நாட்டு விவகாரத்துறையை இவருக்கு அளித்தார். அதை இவர் திறன்பட நிர்வகித்தார்.

இவரது திறமை மிக்க தலைமையில் இந்தியா மிகவும் செல்வாக்கு படைத்த நாடாகிவிடும் என்று உறுதியாக நம்பலாம்.






# கிட்டுவின் யுக்தி

கிட்டுவுக்குப் பிறவியிலேயே கூன் முதுகு. அவன் சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்தவன். அவர்கள் விட்டுப் போன சிறு வீட்டில் இருந்து கொண்டு பஜ்ஜி, போண்டா, வடை என்று தின்பண்டங்களைத் தயாரித்து தள்ளு வண்டியில் வைத்து ஊர்த் தெருக்களில் போய் விற்றுத் தன் வாழ் நாட்களைக் கழித்து வந்தான்.

அவனது பக்கத்து வீடடை வியாபாரத்தில் நொடித்துப் போன வையாபுரி என்றவன் வாங்கி அதில் குடி புகுந்தான். அவனுக்கு இந்திரா என்றும் சந்திரா என்றும் இரண்டு புதல்விகள். இந்திரா வையாபுரியின் முதல் மனைவியின் மகள். முதல் மனைவி இறந்தபின் வையாபுரி பார்வதியை மணந்து கொண்டான். பார்வதியின் மகள் தான் சந்திரா.

இந்திரா அழகானவள். அவள் குரலும் இனிமையானது. கிட்டு தன் வீட்டின் பின்புறம் தின்பண்டங்களை தினமும் தயாரிக்கும் போது 'இந்திரா தன் வீட்டின் கொல்லைப் புறத்தில் பூச் செடிகளுக்குத் தண்ணீர் விடுவதைக் கண்டும் அவள் பாடுவதைக் கேட்டும் கிட்டு மகிழ்ந்து வந்தான். அவன் மனதில் ''நான் இவளை மணக்க விரும்புகிறேன். ஆனால் நான் கூனன் என்ற காரணத்தால் யாருமே எனக்குத் தன் பெண்ணைக் கொடுக்க மாட்டார்களே. இந்த வையாபுரி மட்டும் இந்திராவை எனக்கு மணம் செய்து கொடுக்கச் சம்மதிப்பாரா?'' என்று எண்ணலானான். இது பற்றி வையாபுரியிடம் எப்படிப் பேசுவது என்று யோசிக்கவும் செய்தான். ஆனால் அவனுக்கு ஒரு வழியும் தெரியவில்லை.

ஒருநாள் வையாபுரியே கிட்டுவிடம் ''கிட்டு! எனக்கோ வயதாகி விட்டது. என் இரு மகள்களுக்கும் எப்படிக் கல்யாணம் செய்யப் போகிறேன் என்று கவலையாக இருக்கிறது. அதி

—சிவனார் செல்வன்—



லும் இந்திராவைப் பற்றித்தான் குறிப்பாக என் கவலை. நான் இறந்து விட்டால் பார்வதி அவளைப் பற்றிக் கவலைப்பட மாட்டாள். எனவே நான் உயிருடன் இருக்கும் போதே ஒரு நொண்டியையோ அல்லது முட வனையோ பார்த்துக் கல்யாணம் செய்து வைத்து விட நினைக்கிறேன். ஏன், உனக்கே கூட அவளை மணம் செய்து வைத்து விடலாம். உனக்கு இந்திராவை மணக்க சம்மதம் தானே'' என்று கேட்டான்.

கிட்டுவும் ''எனக்கு சம்மதமே. ஆனால் முதலில் இந்திராவின் சம்ம தத்தையும் உங்கள் மனைவியையும் கேட்டு அவர்களது அபிப்ராயம் என்ன வென்று என்னிடம் கூறுங்கள்'' என் றான். வையாபுரியும் அன்றிரவே தன் மனைவி பார்வதியிடம் இந்திராவைக் கிட்டுவுக்குக் கொடுத்து மணம் செய்து விடலாம் எனக் கூறவே அவளும் ''இப்போது படுத்துக் கொள்ளுங்கள். நாளை காலையில் பேசலாம். கல் யாணத்தை எல்லாம் ஒரு நொடியில் செய்து விட முடியாது. எல்லாம் நன்கு யோசித்தே செய்ய வேண்டும். உங்க ளுக்கு இந்திரா மட்டுமல்ல, சந்திர என்னு இன்னொரு மகளும் இருக்கி றாள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். எனவே இரு பெண் களின் திருமணம் பற்றி நாளை சாவ காசமாகப் பேசலாம்'' என்றாள். ஆனால் மறுநாள் காலை பேசவையா புரி இருக்கவில்லை. ஆம் மாரடைப் பால் இறந்து போய் விட் டான்.

வையாபுரியின் மரணத்திற்கு இரண்டு மாதங்களுக்குப் பிறகு கிட்டு பார்வதியைக் கண்டு ''வையாபுரி இறக்கு முன் இந்திராவை எனக்கு மணம் செய்து கொடுப்பதாகக் கூறி இருந்தார். அது பற்றி உங்களிடம் கூறுவதாகவும் சொன்னார். அவர் உங்களிடம் கூறி இருப்பாரென்றே நினைக்கிறேன். திருமணத்தை எப் போது வைத்தக் கொள்ளலாம்?'' என்று கேட்டான்.

பார்வதிக்கோ தன் மகள் சந்திரா வின் திருமணம் பற்றிய கவலையே இருந்தது. சந்திரா அழகானவளல்ல. அவளது குரலும் எருமை மாட்டினு டையது போல இருக்கும். அதனால் இந்திராவை யாராவது பணக்காரக் கிழவனுக்குப் பணத்தை வாங்கிக் கொண்டு திருமணம் செய்து கொடுத்து விட்டு அந்தப் பணத்தைக் கொண்டு சந்திராவின் திருமணத்தை நடத்தி விட எண்ணினாள்.

அதனால் அவள் கிட்டுவைத் தட்டி கழிக்க எண்ணி ''இதோ பார் கிட்டு! என் மகள் சந்திராவின் திருமணத்தையும் உன் திருமணத்தோடு சேர்த்து நடத்துவதாகக் என் கணவர் என்னிடம் கூறினார். இந்திராவும், தன் திருமணம் நடக்க வேண்டுமென்று தினமும் அம்பாளை அரளிப் பூக்களால் பூசித்து வருகிறாள். அவளது பூசைக்கான அரளிப் பூக்களை அவளது தந்தை தான் விடிவதற்கு வெகு நேரத்திற்கு முன்பே காட்டிற்குள் போய் எடுத்து வருவார். அந்த மலர்கள் விசேஷமானவை. பொன் நிறத்தில் அவை நள்ளிரவில்தான் மலரும். எனவே இந்திரா தன் வேண்டுதலை முடிக்க இன்னும் பத்து நாட்களே உள்ளன. நீ தினமும் போய் அந்த மலர்களைப் பறித்துக் கொண்டு வந்து அவளிடம் கொடுக்கிறாயா?'' என்று கேட்டாள்.

கிட்டுவுக்கு பார்வதி ஏதோ சூழ்ச்சி செய்கிறாள் என்பது புரிந்து விட்டது. அவள் தன்னைக் காட்டுக்கு இரவு வேளையில் அனுப்பி ஏதாவது ஒரு கொடிய மிருகத்திற்கு இரையாக்கவே விரும்புகிறாள் எனச் சந்தேகப்பட்டான். ஆனாலும் இந்திராவிற்காக பார்வதி கூறியபடி நடக்க எண்ணி அதற்குச் சம்மதித்தான். அவன் அன்றிரவே காட்டிற்குள் சென்றான். அந்த அரளிச் செடி ஒரு பாழடைந்த கோவிலருகே இருப்பதாகப் பார்வதி கூறி இருந்ததால் அந்தக் கோவில் எங்கே உள்ளது என்று தேட லானான். ஓரிடத்தில் அக்கோவிலையும் அதனருகேயுள்ள அரளிச் செடியையும் கண்டு விட்டான். அங்கு போய் அரளி மலர்களைப் பறித்து அவன் தனது



மேல் துண்டில் வைத்து மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு சற்று தூரம் போனதும் ஒரு மரத்தின் பின்புறமிருந்து யாரோ பலமாகச் சிரிக்கும் சத்தம் கேட்டது.

கிட்டு ஆச்சரியப்பட்டு மரத்தின் பின்புறம் போய்ப் பார்த்தான். அங்கு ஒரு பாறை மீது ஒரு குட்டிப் பிசாசு தலையை விரித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவனைக் கண்டதும் அப்பிசாசு பலமாகக் கத்தியது.

கிட்டுவோ சற்றும் பயப்படாமல் ''நான் பிசாசுகளை என் மந்திர சக்தியால் அடக்கி அவற்றை அவை இருக்கும் இடத்தில் கொண்டு போய்ப் போட்டு விடுவேன். இதைத் தெரிந்து கொள்'' என்றான். குட்டிப் பிசாசும் ''நான் வழி தவறி இங்கே வந்து விட்



டேன். நான் உன் ஊர் மயானத்தில் வசிக்கும் பிசாசுதான். என்னைக் கொண்டு போய் அங்கே விட்டு விடு கிறாயா? எனக்கு கால்வலிப்பதால் என்னை நீ சுமந்து கொண்டே செல்ல வேண்டும்'' என்றது.

கிட்டுவும் ''சரி. இந்த மலர் மூட்டையை வாங்கிக் கொண்டு என் முதுகின் மீது ஏறி உட்கார். உன்னை சுமந்து கொண்டு நடக்கிறேன்'' என்றான். பிசாசும் அவன் கொடுத்த மூட்டையை வாங்கிக் கொண்டு அவனது கூன் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்தது. கிட்டுவும் அதைச் சுமந்து கொண்டு நடக்கலானான். அப்போது ஒரு மரத்தடியே சில திருடர்கள் தாம் திருடிய பணத்தைக் கீழே கொட்டி பங்கு பிரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கிட்டுவின் முதுகின் மீது பிசாசு அமர்ந்து வருவதைக் கண்டு அவர்கள் பயந்து பணத்தையும் பைகளையும் விட்டு விட்டு ஓடி விட்டார்கள். கிட்டு அவர்கள் விட்டுப் போன பணத்தை எல்லாம் எடுத்து ஒரு பையில் போட்டு எடுத்துக் கொண்டு தன் ஊரின் எல்லையை அடைந்தான்.

அவன் அங்குள்ள மயானத்தில் குட்டிப் பிசாசை இறக்கி விடவே பெரிய பிசாசுகள் ஓடி வந்து ''ஓ! வந்து விட்டாயா? உன்னைக் காணாமல் கவலைப்பட்டுக்கொண்டிருந்தோம். இவன்தான் உன்னைக் கொண்டு வந்தவனா? சபாஷ்'' எனக் கூறிக் கிட்டுவின் முதுகில் சொட்டு வைத்தன. அவன் முதுகிலிருந்த கூனல் போய் முதுகு நேராகி விட்டது. பிசாசுகளும் ''இது நீ செய்த உதவிக்குப் பரிசு'' எனக் கூறி அவனை ஊருக்குள் போக விட்டன.

கிட்டுவும் பணப்பையோடு தன் வீட்டை அடைந்தான். வீட்டிற்குள் பணப் பையை வைத்து விட்டு நிமிர்ந்த போதுதான் அவனுக்கு பிசாசிடம்தான் கொடுத்த மலர் மூட்டையைப் பற்றிய நினைவு வந்தது. மயானத்திற்குப் போய்ப் பார்க்கலாம் என நினைத்த போது குட்டிப் பிசாசே அவன் வீட்டிற்குள் வந்தது. அதன் கையில் மலர்மூட்டை இருந்தது. அது அதை அவனிடம் கொடுத்தவாறே ''நீ இதை என்னிடமே விட்டு விட்டு வந்து விட்டாயே'' என்றது.

கிட்டுவும் ''நல்லவேளை. அவசரத்தில் இதை நான் உன்னிடமே விட்டு வந்து விட்டேன். இப்போதுதான் இது பற்றிய நினைவு எனக்கும் வந்தது. நீ இருக்கும் இடத்திற்கு இப்

போதே வர நான் நினைத்தேன். ஆனால் நீயே இதை எடுத்துக் கொண்டு வந்து விட்டாய். மிக்க நன்றி'' என்றான்.

அப்போது ஒரு தட்டில் பஜ்ஜியும் போண்டாவும் இருப்பது கண்டு குட்டிப் பிசாசு ''இவை என்ன?'' என்று கேட்டது. அப்போது கிட்டு வேடிக்கையாக பஜ்ஜியைக் காட்டி இது இந்திரா என்றும் போண்டாவைக் காட்டி இது சந்திரா என்றும் கூறிக் கொண்டிருந்தான். அப்போது பார்வதி கிட்டுவின் வீட்டிற்குள் வந்து யாரிடம் கிட்டு பேசுகிறான் என்று காண வந்தாள். அங்கு பிசாசு இருப்பதைக் கண்டு அவள் பயந்து நின்றாள்.

குட்டிப்பிசாசும் ''ஓ! இந்திரா, சந்திராவா? எனக்குச் சந்திராவைப் பிடித்திருக்கிறது. எடுத்து விழுங்கட்டுமா'' என்று கேட்டது. ''ஓ! தாராளமாக விழுங்கு. எனக்கு சந்திரா வேண்டியதில்லை. இந்திராதான் வேண்டும்'' என்று உரக்கப் பார்வதியின் காதில் விழும்படிக் கூறினான். அதைக் கேட்ட பார்வதி பயந்து ''ஐயோ பிசாசு என் சந்திராவையா விழுங்கப் போகிறது! நான் இப்போதே சந்திராவை அழைத்துக் கொண்டு இந்த கிராமத்தை விட்டு எங்காவது ஓடிப் போய் விடுகிறேன். இந்திரா எப்படிப் போனால் எனக்கென்ன? சந்திரா கிடைக்காமல் பிசாசு இந்திராவை விழுங்கி விடும்'' என எண்ணி அப்போதே அங்கிருந்து போய் தன் மகள் சந்திராவுடன் ஊரை விட்டே ஓடிப் போய் விட்டாள்.

தன் யுக்தி பலித்தது கண்டு கிட்டு பிசாசிற்கு தின்பதற்குப் பல போண்டாக்களைக் கொடுக்க அதுவும் அவற்றை தின்று விட்டு மகிழ்ச்சியுடன் சென்றது. அதன் பின் கிட்டு தனியாக இருந்த இந்திராவிடம் போய் தனக்குப் பிசாசு செய்த உதவியைக் கூறி ''உன் சித்தி தன் மகள் சந்திராவுடன் எங்கோ ஓடி போய் விட்டாள். பிசாசு தன் மகளை விழுங்கி விடுமோ என்று அவள் பயந்ததுதான் அதற்குக் காரணம். இப்போது நான் கூனன் அல்ல. என்னிடம் பணம் நிறைய இருக்கிறது. உன் தந்தை விரும்பிய படி உன்னை நான் மணக்கிறேன். என்னை மணக்க விருப்பம் தானே?'' என்று கேட்டான். இந்திராவும் வெட்கத்துடன் 'ஆம்' என்றாள்.



# கௌரவப் பிரச்சினை

ஜெயபுரத்தில் வாழும் ஜெய ராஜனின் மகன் விஜயன். அந்த வாலிபன் நன்கு படித்திருந்தும் உத்தியோகம் எதுவும் கிடைக்காமல் கவலையாக இருந்தான். ஒருநாள் ஜெயராஜன் தன் மகனோடு போய்க் கொண்டிருக்கையில் ஆஸ்தான பண்டிதர் ஆத்மநாதரைக் கண்டான். அவரிடம் ''ஐயா! என் மகன் நன்கு படித்திருந்தும் அரசாங்க உத்தியோகம் கிடைக்காமல் இருக்கிறான். நீங்கள் சிபாரிசு செய்தும் இன்னமும் வேலை கிடைக்கவில்லை. எல்லாம் இவனது துரதிர்ஷ்டமே'' என்றான். ஆத்மநாதர் தலையாட்டி விட்டு எதுவும் கூறாமல் சென்றார்.

ஒரு மாதமானதும் விஜயனுக்கு அரசாங்க வேலையில் வந்து சேருமாறு உத்திரவு வந்தது. அப்போது விஜயன் ''ஆத்மநாதரின் தயவால் எனக்கு இந்த உத்தியோகம் கிடைத்திருக்கிறது.'' அவர் யாருக்குமே சிபார்சு செய்ய மாட்டார் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் எனக்கு மட்டும் எப்படி சிபாரிசு செய்தார்?'' என்று ஆச்சரியப்பட்டான்.

அது கேட்டு ஜெயராஜன் சிரித்து ''இதுதான் விஷயம். வரவர ஆத்மநாதர் மீது அரசருக்குள்ள மதிப்பு குறைந்து கொண்டு வருகிறது போலிருக்கிறதே என்று அவரிடமே கூறினேன். அதனால் அவர் அதைத் தன் கௌரவப் பிரச்சினையாக எடுத்தக் கொண்டு உனக்கு சிபார்சு செய்து வேலை கிடைக்கும்படிச் செய்திருக்கிறார்'' என்றான்.





# மாமன்னர் அசோகர்

## 15

*(கலிங்கத்துப் போர் முடிந்தது. வெற்றி பெற்ற அசோகன் தன் நண்பன் யசனை கலிங்கத்தில் தன் ராஜப் பிரதிநிதியாக நியமிக்க எண்ணினான். ஆனால் யசன் மறைந்திருந்த ஒரு பெண் எய்த அம்பால் கொல்லப்பட்டான். உயிர் விடும்போது அப்பெண்ணை மன்னித்து விடும்படி யசன் அசோகனிடம் கூறினான். நண்பனின் மரணம் அசோகனைக் கலக்கி விட்டது. இறந்த தன் நண்பனைப் பற்றியும் போரில் இறந்த லட்சக் கணக்கான கலிங்க மக்களையும் பற்றி நினைத்து அசோகன் மிகவும் வேதனை அடைந்தான். அப்போது–)*

தோசாலி அரண்மனையில் கிடந்த உயிரற்ற உடல்களை எல்லாம் அப்புறப் படுத்தினார்கள். இரத்தக் கறை படிந்த இடங்கள் பெரும் மழை பெய்ததால் சுத்தமாகி விட்டன. ஆனால் அரண்மனையில் ஒரு மண்டபத்தில் அமர்ந்திருந்த அசோகனின் மனதில் பலவித எண்ணங்கள் தோன்றின. யசனைத் தாக்கிய அம்பு தன்னைத் தாக்கி இருந்தால் நிலைமை என்ன ஆகி இருக்கும் என்று அவன் யோசிக்கலானான்.

ஆம். அம்பால் அடிபட்டு அவன் சாகவில்லைதான். ஆனால் அவன் மனமோ சாவது போலத் துடித்துக் கொண்டிருந்தது. தன் வாழ்க்கையில் ஆபத்துகளை எதிர் நோக்கிய போதெல்லாம் தன் பக்கத்தில் நின்று தன்னைக் காத்தவன் யசன்தானே என்று எண்ணிப் பெருமூச்சு விட்டான். இப்போதோ அவன இல்லை.

இந்தப் போரால் என்ன கிடைத்



தது? வெற்றியா? வாழ்க்கையில் வெற்றி என்பதுதான் என்ன? எப்போதோ ஒருநாள் அழியக்கூடிய இந்த மனித வாழ்க்கைக்கு ஏதாவது பொருள் கூற முடியுமா? யசன் கலிங்கத்தில் தன் பிரதிநிதியாக இருப்பான் என்றுதானே அசோகன் எண்ணி மகிழ்ந்திருந்தான். ஆனால் மகதப் படை கலிங்கத்தை எரித்த தீ அணையு முன்னே யசனின் உடல் எரிந்து சாம்பலாகி விட்டதே. இதென்ன அவல வாழ்க்கை!

சேனாதிபதி அங்கு வந்தபோது அசோகனின் சிந்தனை கலைந்தது. அவனிடம் ''உஜ்ஜயினுக்குத் தூதர்களை அனுப்பினாயா?'' என்று கேட்டான். அவனும் ''ஓ! அனுப்பி விட்டேன். கலிங்கத்துப் போரில் கிடைத்த மாபெரும் வெற்றியையும் மகாராணியாரிடம் விவரமாகக் கூறுமாறு அவர்களிடம் சொல்லி அனுப்பினேன்'' என்றான்.

அசோகனோ ''இந்த நமது வெற்றி அவளது மனதை அமைதியுறச் செய்யாது என்பது எனக்குத் தெரியும். ஆனால் யசன் இறந்த செய்தி கேட்டு அவள் இடிந்து போய் விடுவாள். அவன் அவளின் சகோதரனாகவும் பாதுகாப்பாளனாகவும் இருந்தவன்'' என்று மனவேதனையுடன் கூறினான்.

அப்போது வெளியிலிருந்து ஒரு பெண்ணின் குரல் ''அமைதியையே விரும்பிய இந்த நாட்டின் மீது ஒரு காரணமும் இல்லாமல் படை எடுத்து பல குடும்பங்களை நாசப்படுத்தினாயே. பெண்கள் தம் கணவன்களையும், சகோதரர்களையும் சகோதரிகளையும் தந்தை தாய்களையும் இழந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருப்பது உன் கண்ணில் படவில்லையா? அவர்களைப் பற்றி சற்றாவது சிந்தித்துப் பார்த்தாயா, மன்னா?'' என்று அதட்டுவது போலக் கேட்டது.

சேனாதிபதி பின்னால் திரும்பிப் பார்த்து ''ஏய் பைத்தியமே. வாயை மூடிக் கொண்டிரு. கண்டபடி உளராதே'' என்று அந்தப் பெண்ணை அடக்க முயன்றான். அசோகன் அவளைப் பார்த்தான். அம்பை எய்து தன்னைக் கொல்ல முயன்று யசனைக் கொன்றவள் அவள் என அசோகன் கண்டான். சேனாதிபதியும் ''இவளுக்கு தாங்கள் விதிக்கப் போகும் தண்டனை என்ன என்று கேட்கவே இவளை இங்கே இழுத்து வந்தேன்'' என்றான்.

அசோகன் கண் கொட்டாமல் அந்தப் பெண்ணையே பார்த்தான். அவளோ "நான் என் வாயை மூடா விட்டாலும் நீங்கள் நிரந்தரமாக என் வாய் மூடி இருக்கும்படிச் செய்து விடுவீர்கள். அதற்கு முன் நான் சொல்லப் போவதைக் கவனமாகக் கேளுங்கள். யாருக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது? எனக்கா அல்லது அதிகார மமதையில் அகாரணமாய் அப்பாவி மக்களை லட்சக்கணக்கில் கொன்று குவித்த உனக்கா? இது பற்றி யோசித்துப் பார் மன்னா! நான் ஒரு சிற்றரசரின் புதல்வி. நீ நடத்திய போரில் என் தந்தை, என் தாய், என் சகோதரர்கள், என் சகோதரிகள், என் கணவர் ஆகிய எல்லோரையும் இழந்து விட்டு ஆதரவற்றவளாய் நிற்கிறேன். இது என் ஒருத்தியின் கதை. இதுபோல் எவ்வளவோ பேர்கள் கொடுமைகளுக்கு ஆளாகியுள்ளார்கள். நீ உன் நாட்டை விஸ்தரிக்க முயன்ற விளைவைப் பார்த்தாயா? எம் நாட்டின் பசுமையான வயல்கள் எரிக்கப்பட்டன. அயல் நாடுகளுடன் நாங்கள் செய்து வந்த வர்த்தகம் சீர் குலைந்தது. நாட்டில் பஞ்சமும் பட்டினியும் கோரத் தாண்டவமாடுகின்றன. இதற்கெல்லாம் காரணம் யார்? நீயும் நாடுகளைக் கைப்பற்றி ஆள வேண்டுமென்ற உன் பேராசையும் தான். உன்னை உன் வீரர்கள் வெற்றி வீரனென்று வானளாவப் புகழ்வார்கள். ஆனால் மற்ற அரசர்களோ உன்னைக் கண்டு பயந்து நடுங்குவார்கள். இவ்வளவுக்கும் காரணம் நாடுகளைப் பிடித்து நீயே ஆள வேண்டுமென்று ஆசையேதான். தெரிந்ததா?"



என்று பொரிந்து தள்ளினாள்.

சேனாதிபதி தன் வாளை உருவியவாறே "போதும்! நிறுத்து உன் பேச்சை" என்று உறுமினான். அசோகனோ அவனை எதுவும் செய்ய வேண்டாமென்றும் அவள் தொடர்ந்து பேசட்டும் என்று கூறினான். அது கேட்டு சேனாதிபதி ஆச்சரியப்பட்டு எதுவும் செய்யாது நின்றான்.

அந்தப் பெண்மணியும் "மன்னா! இந்நாட்டு மக்களை நீ எங்கு அனுப்பி வைத்தாயோ அங்கு நீயும் ஒரு நாளைக்குப் போய்ச் சேர்ந்து தான் ஆக வேண்டும். எனக்கு அவ்வுலகம் பற்றி எதுவும் தெரியாது. ஆனால் அங்கு நீ அனுப்பியவர்கள் எல்லாம் உன் வரவையும் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறார்களென்றே



நம்புகிறேன். நீ அங்கு போய்ச் சேர்ந்தால் அவர்களெல்லாம் உன்னை என்ன செய்வார்களென்று யோசித்துப் பார்த்தாயா? இங்கு உனக்குப் பாதுகாப்பு அளிக்கும் சேனாதிபதியும் வீரர்களும் அங்கும் உன் கூட வருவார்கள் என்று நினைக்கிறாயா? வரமாட்டார்கள். நீ தனியாகத்தான் போவாய். அப்போது அவர்கள் உன்னைச் சூழ்ந்து கொண்டு என்னவெல்லாம் செய்யப் போகிறார்களோ? உன்னைக் காக்க யாரும் இல்லாத நிலையில் உன் கதி என்ன ஆகுமென்று நீயே யோசித்துப் பார்'' என்று கூறினாள்.

சேனாதிபதியோ கோபத்தோடு ''அரசே! இவளைக் கொன்று விட அனுமதியுங்கள். இவளை ஒரேயடியாகப் பேச விடாமல் செய்து விடுகிறேன்'' என்றான். அசோகனோ சேனாதிபதிக்கு பதில் எதுவும் கூறாமல் எழுந்து அப்பெண்ணின் பக்கம் போய் நின்று ''பெண்ணே! உன் பெயர் என்ன?'' என்று கேட்டான். அவளும் காருவாகி எனவே அசோகனும் ''காருவாகி! நீ என் நிலையில் இருந்தால் என்ன செய்வாய் என்று சொல் பார்க்கலாம்'' என்று கேட்டான்.

அவளும் ''பயனற்ற நாடு பிடிக்கும் ஆசையை விட்டு விடுவேன். வெறி கொண்டு இப்படி அப்பாவி மக்களைக் கொல்ல மாட்டேன். நான் இவ்வாறு கொடுமைகள் செய்திருந்தால் அதற்காக மனம் வருந்துவேன். ஆயுதங்களை இனித் தொட மாட்டேன் என்று சபதம் செய்வேன். பிறரைத் துன்புறுத்துவது மிகக் கேவலமான மனித இயல்பு என்று அறிவிப்பேன்'' எனறு சற்றும் பயப்படாமல் துணிச்சலுடன் கூறினாள்.

அப்போது அசோகனின் மெய்க் காப்பாளர்கள் தலைவன் அங்கு வந்து மன்னனை வணங்கி ''அரசே! உஜ்ஜயினியிலிருந்து தூதன் ஒருவன் வந்திருக்கிறான்'' என்று தெரிவித்தான். அசோகனும் அவனை அழைத்து வரும்படிக் கூறவே, அத்தலைவன் வெளியே போய் உஜ்ஜயினிலிருந்த வந்த தூதனை அழைத்துக் கொண்டு வந்தான். அசோகனும் ''ஓகோ! ஸ்ரீகரனா? சரியான சமயத்தில்தான் வந்திருக்கிறாய். உஜ்ஜயினியில் ராணியும், என் மகனும் மகளும் நலமாகத் தானே இருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

ஸ்ரீகரனும் தலை குனிந்தவாறே ''அரசே! என்னை மன்னிக்க வேண்



டும். தங்களுக்குத் துயரத்தைக் கொடுக்கக் கூடிய செய்தியைக் கொண்டு வந்திருக்கிறேனே என்று எண்ணி மனம் புழுங்கிக் கொண்டிருக்கிறேன்'' என்றான். அசோகனும் ''பரவாயில்லை. எப்படிப்பட்ட பயங்கரச் செய்தியாக இருந்தாலும் சொல். அதைக் கேட்டுக் கொள்கிறேன்'' என்றான். ஸ்ரீகரனும் தழுதழத்த குரலில் ''மகாராணி விதிஷா தேவியார் பரலோகம் சென்றடைந்து விட்டார்'' என்று கூறினான்.

அசோகன் திடுக்கிட்டு ''ஆ! என்ன கூறினாய்?'' என்று கேட்கவே ஸ்ரீகரனும் ''அரசே! வியாபாரம் செய்ய உஜ்ஜயினிலிருந்து வந்த சில வர்த்தகர்கள் இங்கு முதல் நாள் நடந்த போரைக் கண்டு பயந்து உஜ்ஜயினிக்கே ஓடிப் போனார்கள். இங்கு கண்ட பயங்கரக் காட்சிகளையும் இந்நாட்டு மக்கள் பட்ட அவஸ்தைகளையும் அங்கு அவர்கள் எல்லோரிடமும் கூறினார்கள். அவற்றை எல்லாம் கேள்விப்பட்ட மகாராணியார் அந்த வர்த்தகர்களையே அழைத்து அவர்கள் வாயிலாகப் போர் பற்றிய முழு விவரங்களையும் தெரிந்து கொண்டார். தன் கணவர் செய்த தகாத செயல்களுக்குத் தானே பிராயச்சித்தம் செய்வதாகக் கூறி ஒரு ஆலயத்திற்குள் சென்று தியானத்தில் அமர்ந்து விட்டார். மூன்று நாட்கள் ஆகாரமும் தூக்கமும் இல்லாமல் அங்கேயே அமர்ந்திருந்து நான்காவது நாள் தம் நினைவு இழந்து விழுந்து உயிரை விட்டார்'' என்றான்.

அங்கு சற்று நேரத்திற்கு அமைதி நிலவியது. காருவாகி திடீரெனப் பலமாகச் சிரித்தாள். அது அரண்மனை முழுவதும் எதிரொலித்தது. சேனாதிபதியோ பல்லைக் கடித்துக் கொண்டு ''சிரிப்பதற்கு இதுவா வேளை?'' என்று கூறி அவளை எரித்து விடுவது போலப் பார்த்தான். அவளோ ''சேனாதிபதியே! என் வாழ்வில் சிரிப்புக்கும் அழுகைக்கும் வித்தியாசமே இல்லை. நான் எப்போது அழுவது, எப்போது சிரிப்பது என்பதையெல்லாம் மறந்து விட்டேன்'' என்றாள்.

சேனாதிபதியோ ''இந்த அரக்கியை லேசில் விடக் கூடாது. கண்ட துண்டமாக வெட்டிப் போட வேண்டும்'' என்று கருவினான். அசோகனோ ''வேண்டாம். முதலில் அவளது கை விலங்கை கழற்றுங்கள் பிறகு அவளை விடுதலை செய்யுங்கள்''

என்றான். சேனாதிபதி அது கேட்டுத் திகைத்து ''யசனைக் கொன்ற இந்தப் பாவியையா விடுதலை செய்வது?'' என்று கேட்டான்.

அசோகனும் 'ஆமாம். யசனே இவளை மன்னித்து விட்டான். இவள் அம்பை எனக்குக் குறி வைக்காமல் யசனுக்குக் குறி வைத்து எய்தாள். அதற்கு நன்றி தெரிவிக்கும் விதமாக இவளை மன்னித்து விடும்படிக் கூறி விட்டே உயிர் விட்டான். யசனின் கடைசி விருப்பத்தை நான் நிறை வேற்ற வேண்டும்'' என்றான்.

சேனாதிபதி விலங்கைக் கழற்றிய தும் காருவாகி ''அரசே! யசன் எவ் வளவு உயர்ந்த உள்ளம் படைத்தவன் என்பது அவன் கடைசியாகத் கூறிய வார்த்தைகளிலிருந்து தெரிகிறது. என் நாட்டு மக்களைப் பலவிதத்திலும் துன்புறுத்திய உன்னையும் யசனயும் கொன்று விடுவது என்று எண்ணியே வில்லையும் அம்புகளையும் எடுத்து வந்தேன். ஆனால் குறி வைக்கும் போது ஏனோ உன்னைக் கொல்லக் கூடாது என்றும் யசனை மட்டும் கொல்ல வேண்டுமென்றும் என் மனதில் பட்டது. ஒருவேளை இனி உன்னால் உலகிற்கு ஏதோ ஒரு நன்மை ஏற்படலாம் என்று நான் நினைத்தேன் போலிருக்கிறது'' என்றாள்.

அசோகனும் ''இவ்வளவு உயிர் களை பலி வாங்கிய நானா உலகிற்கு நன்மை செய்யப் போகிறேன்?'' என்று சலித்துக் கொண்டே கூறினான். அப்போது காருவாகி ''மன்னா! ஒவ் வொரு மனிதனிடமும் நற்குணமும் கெட்ட குணமும் மறைந்துள்ளன. யசன் பல கொடிய மரணங்களுக்குக்



காரணமாக இருந்தவன்தானே. ஆனா லும் அவன் இறக்கும் போது அவனது உயர் குணம் வெளிப்பட்டது. அது போல இதுவரை பலரைக் கொன்ற நீயும் மனம் மாறி உயர்ந்த மனிதனாக ஆகி விடக்கூடும். இது பற்றி அமைதி யாகச் சிந்தித்துப் பார்'' எனக் கூறி அசோகனை வணங்கி விட்டு அங்கி ருந்து சென்றாள்.

போரில் பிடிபட்டவர்களை எல் லாம் விடுதலை செய்து விட்டு தோசாலியின் ஆட்சிப் பொறுப்பை சேனாதிபதியிடம் ஒப்படைத்து விட்டு அசோகன் உஜ்ஜயினுக்குச் சென்றான். அங்கு சாம்பலாகிப் போன விதிஷா தேவியை எண்ணிக் கண்ணீர் வடித்தான். அவனது மகன் மகேந்திரனும், மகள் சங்கமித்திரை யும் சேர்ந்து நின்று மௌனமாக

அஞ்சலி செலுத்தினர்.

அப்போது அசோகன் ''நான் உங்கள் தாயார் என் மீது வைத்திருந்த நம்பிக்கையைத் தகர்த்து விட்டேனே'' என்றான். அப்போது புத்த பீக்ஷு உபகுப்தர் அங்கு வந்து ''அதற்கு நீ பிராயச்சித்தம் செய்து விடலாம். எந்த ஒரு கெட்ட செயலுக்கும் மாற்றாக பிராயச்சித்தம் செய்ய வழி உண்டு. புத்தரைச் சரணடைந்தால் அதற்கு வழி பிறக்கும்'' என்றார்.

அசோகனின் வாழ்க்கையில் அந்த நொடியிலிருந்தே ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாகியது. உபகுப்தரின் உபதேசங்களைக் கேட்டு அவன் புத்தி மதத்தைத் தழுவினான். போரை வெறுத்தான். அஹிம்சையை உயர் நெறியாகக் கொண்டு நாட்டில் எந்த ஜீவனையும் துன்புறுத்தக் கூடாது என்று கட்டளை இட்டான். நாட்டில் அமைதியைக் காத்து அஹிம்சை நெறியைப் பரப்பப் பலரை நியமித்தான்.

தோசலி நகருக்கு முன் உள்ள குன்றில் தன் கொடூரச் செயல்களுக்கு வருத்தம் தெரிவிப்பதாக அவன் பாறையில் பொறித்து வைத்தான். படை பலத்தால் எதையும் சாதிக்க முடியாது எனவும் நல்வழிப்பட்டு மன மாற்றம் ஏற்பட்டாலே நன்மை விளையும் என்று தான் உணர்ந்ததை அப்பாறையில் பொறிக்கச் செய்தான். இம்மாதிரி உபதேசங்களை நாட்டின் பல பகுதிகளில் பாறைகள் மீது பொறிக்கச் செய்தான். அயல் நாடுகளுக்கு படித்த பௌத்த பிரசாரகர்களை அவன் அனுப்பினான். அவனது மகன் மகேந்திரனும் மகள் சங்கமித்திரையும் ஸ்ரீலங்காவிற்குப் போய் அங்கிருந்த மன்னனையும் மக்களையும் பௌத்த மதத்தை ஏற்கும் படிச் செய்தனர்.

அசோகன் உலகின் மாமன்னன் என்ற புகழ் பெற்றான். அதற்குக் காரணம் அவன் கடைப் பிடித்த உயர் நெறிகளே ஆகும். உலகில் எவ்வளவோ மன்னர்கள் எவ்வளவோ சாம்ராஜ்யங்களை நிறுவினார்கள். ஆனால் மனித குலத்தின் மேன்மையைக் கருத்தில் கொண்டு உயரிய லட்சியத்துடன் செயல்பட்ட மாமன்னன் அசோகன்தான் என்பதில் சற்றும் ஐயமில்லை.

**(முடிவுற்றது)**





# குருதட்சிணை கிடையாதா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் பொறுமையாக விடா முயற்சியுடன் எந்தச் செயலைச் செய்ய விரும்புகிறாய்? ஒரு செயலைச் செய்ய பொறுமையும் விடாமுயற்சியும் இருந்தால் மட்டும் போதாது. அது பற்றிய முழு விவரமும் அறிந்திருக்க வேண்டும். இதற்கு உறுதுணை அறிவு. அதைப் பெற யாராவது ஒரு குருவிடம் கல்வி பயில வேண்டும். அவருக்கு குரு தட்சிணையும் கொடுக்க வேண்டும். சில சீடர்கள் குரு தட்சிணை கொடுக்காமல் இருந்து விடுவதும் உண்டு. இதற்கு உதாரணமாக ரத்தினம் என்பவனின் கதையைக் கூறுகிறேன்

## வேதாளம் சொல்லும் கதை



கவனமாகக் கேள்'' என்று சொல்லிக் கதையை ஆரம்பித்தது.

ரத்தினம் ஒரு ஏழை விவசாயியின் குடும்பத்தில் பிறந்தவள். அவனது பெற்றோர்களுக்குஅவன்ஒரேமகனா தலால் அவர்கள் அவனுக்கு மிகவும் செல்லம் கொடுத்து வந்தார்கள். அதனால் அவன் சரியாகப் படிக்க வில்லை. ஆனால் படித்தவர்கள், பண்டிதர்கள், அறிஞர்கள் ஆகியோர் பேசுவதை எல்லாம் கேட்டு அவர்கள் பேசுவது போலவே பேசக் கற்றுக் கொண்டு விட்டான்.

ஒருநாள் ரத்தினம் சில சிறுவர் களுடன் சேர்ந்து பந்து விளையாடிக் கொண்டிருந்தான். ஒரு சிறுவன் எறிந்த பந்து பண்டிதர் பரசுராமரின் மீது பட்டது. எல்லாச் சிறுவர்களும் அவர் என்ன சொல்லுவாரோ என்று பயந்து ஓடி விட்டார்கள். ஆனால் ரத்தினம் மட்டும் ஓடவில்லை. பயப் படாமல் நின்று கொண்டிருந்தான்.

அவனைக் கண்ட பரசுராமர் ''அடே! எல்லோரும் பயந்து ஓடிவிட் டார்கள். நீ ஓட வில்லையே. நீ பயப் படவில்லையா?'' என்று கேட்டார். அவனும் ''சூரியனைக் கண்டுதான் பயப்பட்டு ஓட வேண்டும். சந்திரனின் குளிர்நிலவைக் கண்டு யாரும் பயந்து ஓட மாட்டார்களே'' என்றான். அது கேட்டு பரசுராமர் ''பேஷ். பேஷ். ரொம்ப நன்றாகப் பேசுகிறாயே. நான் சூரியன்தான். என்னைச் சந்திரன் என்று ஏன் நினைத்து விட்டாய்?'' என்று கேட்டார்.

ரத்தினமும் ''ஐயா! சூரியனை நேராகக் உற்றுப் பார்க்க முடியாது. அதனால் அதில் புள்ளிகள் உள்ள னவா என்று கூற முடியாது. சந்திரனைக் கண் குளிரப் பார்க்க முடியும். அதி லுள்ள கரும் புள்ளிகளைப் பார்க்க லாம்'' என்றான். அப்போது பரசுராமர் ''சந்திரனில் காணப்படும் புள்ளிகள் போல என்னிடம் காண முடியாதே. உன் பந்து பட்ட அழுக்குப் புள்ளிகள் தான் உள்ளன'' என்றார்.

ரத்தினமும் ''ஐயா! நான் தங்களைச் சந்திரனுக்கு இணையாகக் கூறியதால் தாங்கள் என் மனம் குளிரச் செய்வீர் களென்றே நம்புகிறேன். இதுதான் நான் கூற விரும்பியது'' என்றான் மிகவும் பணிவாக. அவரும் ''சரி. உன் மனம் குளிரச் செய்கிறேன். நீ தின மும் மாலையில் என் வீட்டிற்கு வா. உனக்கு எல்லா சாஸ்திரங்களையும் கற்றுக் கொடுக்கிறேன்'' என்றார். ரத்தினமும் அவரிடம் எல்லா சாஸ்

திரங்களையும் அவரது அபிமான சீடனாக இருந்து கற்று வரலானான். பரசுராமரும் அவன் மிகவும் சிரத்தை யுடன் கல்வி பயில்வது கண்டு எல்லா சாஸ்திரங்களையும் கற்பித்தார்.

ரத்தினத்திற்குப் பதினேழு வயதாகி விட்டது. ஒருநாள் அவன் தந்தைக்கு சாப்பாட்டை வயலுக்கு எடுத்துச் சென்றான். அப்போது வழியில் இருவர் சண்டைபோட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். அதில் ஒருவன் கையில் கத்தி இருந்தது. மற்றவன் கையில் கத்தி இல்லை. அவன் அவ்வூரில் மிகப் பெரிய பணக்காரன். தனபாலன்.

ரத்தினமும் சாப்பாட்டு மூட்டையை ஓரிடத்தில் வைத்து விட்டு தனபாலனைத் தாக்குபவனின் கையிலிருந்த கத்தியைச் சட்டெனப் பிடுங்கி எடுத்தக் கொண்டான். அதன்பின் தனபாலனும் ரத்தினமும் சேர்ந்து அந்த மனிதனைப் பிடித்துக் கட்டிப் போட்டார்கள். தனபாலன் ரத்தினத்திடம் ''நீ இன்று என்னை இவனிடமிருந்து காப்பாற்றினாய். என் உயிர் தப்பியது. உனக்கு என்ன வேண்டுமோ கேள். கொடுக்கிறேன்'' என்றான்.

ரத்தினமும் ''இப்போது எனக்கு எதுவும் வேண்டாம். எனக்கு வேண்டும் போது தங்களிடம் கேட்டு வாங்கிக் கொள்கிறேன். ஆனால் நம் ஊரில் திருடர்கள் எல்லோரையும் பயமுறுத்துவதை அனுமதிக்கக் கூடாது. பட்டப் பகலில் இவன் உங்களைத் தாக்கி இருக்கிறான். இவ்வாறு இனியும் நேராதிருக்க நம் ஊரில் ஊர்க் காவல் படை ஒன்றை அமைக்க வேண்டும். நீங்கள் நினைத்தால்



இத்தகைய படை ஒன்றை எளிதில் ஏற்படுத்தி விடலாம்'' என்றான்.

அன்று மாலை கிராம அதிகாரி ரத்தினத்தை அழைத்து ''இன்று நீதாக்கிப் பிடித்த திருடன் சாமான்னியப் பட்டவனல்ல. இந்தச்சுற்றுப் பக்கத்து கிராமங்களையே அலற அடிக்க வைக்கும் கட்டைய்யன் என்பவன். இப்படிப்பட்ட திருடனை நீ பிடித்திருக்கிறாயென்றால் உனக்கு பலம் அதிகம் என்பதனையே காட்டுகிறது. நீ யாரிடம் போர்க் கலையைக் கற்றாய்?'' என்று கேட்டார்.

அப்போது ரத்தினம் ''நான் போர்க் கலையை யாரிடமிருந்தும் பயிலவில்லை. எல்லா சாஸ்திரங்களையும் பரசுராமரிடம் கற்றேன்'' என்றான். கிராம அதிகாரி ''ஆனால் நீ பிடித்த பிடி தனக்குக் கூட தெரியாது என்று



அந்தக் கட்டைய்யன் கூறினானே'' என்று ஆச்சரியப்பட்டவாறே கூறினார். பிறகு அவர் ''நீதான் இந்த ஊர்க் காவலதிகாரி'' எனக் கூறி அவனுக்கு அந்த வேலையைத் தந்தார்.

ரத்தினமும் ''நான் கட்டைய்யனைப் பிடித்தது ஏதோ சந்தர்ப்ப வசத்தால்தான். ஆனால் போர்க் கலையை நன்குப் பயின்ற பிறகே நான் இந்த வேலையை ஏற்க முடியும்'' என்றான். அது கேட்டு கிராம அதிகாரி புன்னகை புரிந்து ''நானே அக்கலையில் நன்கு பயிற்சி பெற்றவன். ஆனால் கிராம அதிகாரி என்றிருப்பதால் எனக்குப் பல பொறுப்புகள் உள்ளன. உன்னைக் காவலதிகாரியாக நியமிக்கிறேன். நீ தினமும் காலையில் என்னிடம் போர்க் கலையில் பயிற்சி பெறு'' என்றார்.

அன்று முதல் ரத்தினம் கிராம அதிகாரியிடம் போர்க் கலையில் பயிற்சி பெறலானான். அவன் அதை மிகவும் சிரத்தையுடன் பயின்று வந்தான். கிராமத்திற்குத் தக்க பாதுகாப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்தான். தனக்கு உதவியாளர்களாக இரு வாலிபர்களையும் அவன் வைத்துக் கொண்டான். இப்படியாக காலம் கழிய ரத்தினத்தின் வயதும் இருபதாகி விட்டது.

இப்போது ரத்தினம் எல்லா சாஸ்திரங்களையும் கற்றவன். போர்க் கலையிலும் நன்கு தேர்ச்சி பெற்றவன். அவன் பரசுராமரிடமும், கிராம அதிகாரியிடமும் தான் அவர்களுக்கு குரு தட்சிணை கொடுக்க விரும்புவதாகக் கூறினான். இருவருமே ''நீ உன் சக்தி சாமர்த்தியத்தால் நன்கு சம்பாதித்த பிறகு உனக்கு எவ்வளவு கொடுக்க வேண்டுமென்று தோன்றுகிறதோ அதைக் கொடுத்தால் போதும்'' என்றனர்.

இச்சமயத்தில் நாட்டின் தலைநகரிலிருந்து ரத்தினத்தின் உறவினர் ஒருவர் வந்தார். அவர் ரத்தினத்திடம் ''இன்னும் ஒரு மாதத்தில் தலைநகரில் ஒரு விசித்திரமான போட்டி நடக்கப் போகிறது. அங்கு சாஸ்திரங்களிலும் போர்க் கலையிலும் போட்டிகள் நடக்கும். அவற்றில் வெற்றி பெறுபவர்களுக்குத் தனித் தனியாக சன்மானம் அளிக்கப்படும். அதன் பின் சாஸ்திரப் போட்டியில் வெற்றி பெற்றவருக்கும் போர்க் கலையில் வெற்றி பெற்றவருக்கும் போட்டி நடக்கும். இதில் வெற்றி பெறுபவருக்கு ஒரு அதிசயப் பரிசு அளிக்கப்படுமாம். அது என்ன என்று யாருக்கும்

தெரியாது. இப்போட்டிகளில் கலந்து கொள்பவர்கள் முதலில் நுழைவுக் கட்டணமாகப் பத்தாயிரம் வராகன் களைச் செலுத்த வேண்டும். இது அதி சயப் போட்டி தானே'' என்றார்.

இதைக் கேட்டதும் ரத்தினத் திற்குத் தான் அப்போட்டிகளில் கலந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஆனால் நுழைவுக் கட்டணமாகப் பத்தாயிரம் வராகன் கள் செலுத்த வேண்டும். அதற்கு என்ன வழி என்று அவன் யோசிக்க லானான். அப்போட்டிகள் பற்றி தன பாலனுக்குத் தெரிய வரவே அவன் ரத்தினத்தை அழைத்து ''நான் உனக் குப் பத்தாயிரம் கொடுக்கிறேன். நீ போட்டிகளில் கலந்து கொள். நீ அவற் றில் வெற்றி பெற்றால் நான் கேட் பதை நீ கொடுக்க வேண்டும். சரியா?'' என்று கேட்டான்.

ரத்தினமும் ''நீங்கள் கேட்பது என் சக்திக்கு மீறாமல் இருந்தால் தாராள மாகக் கொடுக்கிறேன்'' என்றான். தனபாலனும் அதற்கு இணங்கிப் பணத்தைக் கொடுத்தான். ரத்தினமும் தலைநகருக்குப் போய்ப் போட்டி களில் கலந்து கொண்டான். முதலில் சாஸ்திரப் போட்டி. அதில் ரத்தினமே எல்லோருக்கும் முதலாவதாக வந் தான். போர்க் கலைப் போட்டியிலும் அவனே முதலிடம் பெற்றதால் மூன் றாவது போட்டியை நடத்த வேண்டிய அவசியமே இல்லாது போயிற்று.

அப்போது அந்த நாட்டு மன்னன் ''இந்த மூன்று போட்டிகளின் முடிவு களும் இவ்வாறு ஏற்பட்டது கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இவ்வாறு போட்டிகளை நான் வைத்த



தற்கு ஒரு முக்கிய காரணம் உள்ளது. என் ஒரே மகளான சொர்ண ரேகா விற்குத் தக்க வரனைத் தேடிக் கொண் டிருக்கிறேன். சுயம்வரம் என நடத்தா மல் நம் நாட்டிலேயே நன்கு படித்த வனாயும் போர்க் கலையில் திறன் பெற்றவனாகவும் உள்ள ஒருவனைத் தேர்ந்தெடுக்கவே இவ்வாறு போட்டி களை நடத்தினேன். தகுதி இல்லாத வர்களெல்லாம் போட்டியில் கலந்து கொண்டு விடுவார்கள் என்று எண் ணியே நுழைவுக் கட்டணம் என்று பெருந் தொகையைச் செலுத்த வேண்டுமென அறிவித்தேன். எனவே என் மகளை இந்த ரத்தினத்திற்கு திரு மணம் செய்து வைக்கப் போகிறேன்'' என அறிவித்தான்.

முகூர்த்த நாளும் குறிப்பிடப்பட் டது. ரத்தினம் தன் தாய் தந்தையரை



யும், தனபாலனையும், பரசுராமரை யும், கிராம அதிகாரியையும் திரு மணத்திற்கு வரும்படி அழைக்கவே, அவர்களும் திருமணம் நடக்கும் நாளுக்கு ஒருநாள் முன்னதாகவே தலை நகருக்கு வந்தார்கள்.

ரத்தினம்தான் இரு போட்டிகளி லும் பெற்ற பரிசுத் தொகைகளை பரசு ராமருக்கும் கிராம அதிகாரிக்கும் குரு தட்சிணையாக கொடுத்தான். ஆனால் பரசுராமர் அதை ஏற்காமல் ''ரத்தினம்! இனி நீதான் இந்நாட்டுப் மன்னனாகப் போகிறாய். அப்போது நீ என்னை ஆஸ்தானப் பண்டிதராக நியமித்து விடு. அதுதான் நீ எனக்குக் கொடுக் கும் குருதட்சிணை'' என்றார்.

ரத்தினமோ ஆச்சரியப்பட்டு ''குருவே! ஆஸ்தான பண்டிதரை நிய மிக்கும் போது சில விதிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டிவருமே. அவற் றின் படி நியமிக்க உங்கள் தகுதிகள் இடம் கொடுத்தால் அதைச் செய்கிறேன். ஆனால் இதை குரு தட்சிணையோடு சம்மந்தப்படுத்த வேண்டாம், இப்போது நான் கொடுக் கும் லட்சம் வராகன்களை குரு தட்சிணையாக ஏற்றுக் கொள்ளுங் கள்'' என்று வேண்டினான்.

பரசுராமரோ கோபம் கொண்டு ''அடே! உனக்கு சாஸ்திரங்களைக் கற் பித்து பண்டிதனாக்கினேன். என்னால் தானே நீ இவ்வளவுக்கு உயர்ந்தாய். என் தகுதிகளை நீ பார்த்ததே எனக்கு பதவி கொடுப்பாயா? நீ நன்றி மறந்த வன்'' என்று கூறி சென்று விட்டார்.

கிராம அதிகாரி தனக்கு குரு தட் சிணையாக சேனாதிபதிப் பதவி வேண்டுமெனக் கோரவே ரத்தினம் பரசுராமரிடம் கூறியபடியே அவரிட மும் சொன்னான். கிராம அதிகாரியும் அவனை நன்றி கெட்டவன் எனக் கூறி விட்டுப் போய்விட்டார். அடுத்து தன பாலன் தன் மகளை மணந்து கொள் ளும்படி ரத்தினத்திடம் கூறினான். ரத்தினம் அதற்குச் சம்மதிக்காததால் அவனும் ரத்தினத்தை நன்றி மறந் தவன் என்று கூறிவிட்டுச் சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! ரத்தினம் தன் குருமார்கள் கேட்ட குருதட்சிணையைக் கொடுக்க முடியாது எனக் கூறியது இனி அவன் தான் மன்னனாகப் போகிறான் என்ற அகம்பாவத்தினாலா? அவர்கள் தாமே சாஸ்திரங்களையும் போர்க் கலையையும் கற்பித்தார்கள்? தன பாலன் பணம் கொடுத்து உதவிய தால்தானே ரத்தினம் போட்டிகளில்

கலந்து கொள்ள முடிந்தது. இம்மூவர் செய்த உதவிகளுக்கு ரத்தினம் நன்றி செலுத்தும் வகையில் அவர்கள் கேட்டதைக் கொடுத்திருக்க வேண்டாமா? அவ்வாறு அவன் கொடுக்காமல் இருந்தது செய் நன்றி மறந்தது தானே. மூவரின் உதவியால் தானே ரத்தினம் முன்னுக்குவந்து உயர் நிலையை அடைந்தான் என்பதை அவன் முற்றிலும் மறந்து விட்டானா? இந்தக் கேள்விகளுக்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ரத்தினம் தன் தகுதிகளால் போட்டிகளில் வென்று அரசகுமாரியை மணந்து நாட்டின் அரசனாகும் நிலையை அடைந்தான். இதனால் ரத்தினம் தன் இஷ்டப்படி யாரையும் எந்தப் பதவிக்கும் நியமிக்கலாம் என்றாகி விட முடியாது. அவ்வாறு நியமிக்க விதிமுறைகள் உண்டு என்று தான் ரத்தினம் தன் குருமார்களிடம் கூறினான். அந்த இருவருக்குமே தம் தகுதிகள் மீது நம்பிக்கை இல்லை. அவர்களால் படிப்பிலும் போர்க் கலையிலும் ரத்தினம் பயிற்சி பெற்ற போதிலும் தன் தகுதியாலும் சாமர்த்தியத்தாலும் அந்த உயர் நிலையை அடைந்தான். உண்மையிலே அந்த குருமார்கள் தகுதி பெற்றவர்களென்றால் ரத்தினத்தின் உதவியை நாடி இருக்கவே வேண்டாமே. ஒரு குரு சீடனுக்குக் கற்பிக்கத் தான் முடியும். உயர் பதவியை அளிக்க முடியாது. சீடன் தன் தகுதியால் உயர்கிறான். இந்நிலையில் குரு தன்னை சீடனை விட உயர்ந்தவனாக நினைப்பது தவறு. தனபாலன் ரத்தினம் உயர் நிலையை அடைந்த பிறகே தன் மகளை அவனுக்கு மணம் செய்து வைக்க முன் வந்தான். ரத்தினம் தாழ் நிலையில் இருந்தபோது அவ்வாறு கூற வில்லை. மேலும் தனபாலன் பத்தாயிரம் வராகன் கொடுத்தது ரத்தினம் அவனைத் திருடனிமிருந்து காப்பாற்றியதற்கு எனவே கொள்ள வேண்டும். இக் காரணங்களால் ரத்தினம் நன்றி மறந்தவன் என்று சொல்வது சரியல்ல'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# நம்பிக்கை வேண்டும் ஐயா!

வட்டிக் கடை வைரவனிடம் ராமன் வேலை பார்த்து வந்தான். வைரவன் போதிய சம்பளம் கொடுக்காததால் ராமன் சிதம்பரத்தின் கடையில் வேலை செய்ய எண்ணி சிதம்பரத்தைக் கண்டான். ராமன் சொன்ன காரணத்தைக் கேட்டு விட்டு சிதம்பரம் வீட்டினுள் போய் பத்து ரூபாய் நோட்டுக் கட்டு ஒன்றை எடுத்த வந்து ராமனிடம் கொடுத்து ''இதில் ஆயிரம் ரூபாய் உள்ளது. வைரவனிடம் கொடுத்து விட்டுவா'' என்றான்.

ராமன் அதை வாங்கிக் கொண்டு போய் விட்டு அரை மணி நேரத்தில் சிதம்பரத்திடம் திரும்பி வந்தான். சிதம்பரம் ராமனிடம் ''சரியாக ஆயிரம் ரூபாயை வைரவனிடம் கொடுத்தாயா?'' என்று கேட்டான். ராமனும் கொடுத்ததாக கூறவே, சிதம்பரம் கோபத்தோடு ''நான் கொடுத்த ரூபாய்க்களில் ஒரு பத்து ரூபாய் நோட்டை அதிகமாக வைத்திருந்தேன். நீ அதை எடுத்தக் கொண்டு விட்டு ஆயிரம் ரூபாயை மட்டும் வைரவனிடம் கொடுத்திருக்கிறாய். உன்னை நான் வேலைக்கு வைத்துக் கொள்ள மாட்டேன்'' என்றான்.

ராமனும் ''ஐயா! நீங்கள் நோட்டு கட்டைப் கொடுத்து அதில் ஆயிரம் ரூபாய் இருப்பதாகக் கூறினீர்கள். நீங்கள் சொன்னதில் நம்பிக்கை வைத்து அதை எண்ணிப் பார்க்காமல் எடுத்துச் சென்றேன். ஆனால் வைரவனிடம் கொடுக்கும் போது எண்ணி ஆயிரம் ரூபாயைக் கொடுத்து அதிகமாக இருந்த பத்து ரூபாயை உங்களிடம் கொடுக்கவே எடுத்து வந்தேன். ஆனால் நீங்கள் என் மீது நம்பிக்கை வைக்காமல்தான் இவ்வாறு செய்தீர்களென்று தெரிந்து விட்டது. நம்பிக்கையை நீங்கள் முக்கியமாகக் கருதுவது போல நானும் கருதுகிறேன். எனக்கு உங்கள் வேலை வேண்டாம். இன்று உங்கள் வேலையைச் செய்ததற்கு இந்தப் பத்து ரூபாய் என் கூலி'' என்று கூறி விட்டுச் சென்றான்.



காவேரிக்கரையோரமாய்...2

# நீர்த் தேக்கங்களின் நிர்மாணம்

◆ கருத்து: **ஜெயந்தி மகாலிங்கம்**
◆ ஓவியர்: **கௌதம் சென்**

குட்கிலிருந்து 30 கி.மீ. தொலைவில் இராமநாதபுரம் என்னும் ஊரருகே காவேரி நதியின் இடது புறக் கரையில் ஒரு மிகப் பெரிய பாறை உள்ளது. இதன் மீது சிவன் கோவில் ஒன்று உள்ளது. இதனை இப்பகுதி மக்கள் கோகர்ப்பம் எனக் கூறுகிறார்கள். இராவணனைக் கொன்ற பாவத்தைப் போக்கிக் கொள்ள இராமர் இங்கு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து பூஜித்தாராம். ஆதிசங்கரர் கூட இந்த ஆலயத்திற்கு வந்து சிவபிரானை வழிபட்டதாகவும் பலர் இங்கு நம்புகிறார்கள்.



**இராமநாதபுரம் கோவில்**

இங்கிருந்து சற்று இறங்கிப் போனால் கட்டபுர என்ற ஊர் வருகிறது. அதனருகே காவேரி மீது கட்டப்பட்ட பழங்கால அணைக் கட்டு ஒன்று அதன் வேகத்தை மட்டுப்படுத்துகிறது. சுமார் 800 ஆண்டுகளுக்கு முன் லிங்காயத்து சைவ சன்னியாசி களான ஜங்கமர்கள் இதனை நிர்மாணித்ததால் இதற்கு ஜங்கமகட்டே என்ற பெயர் ஏற்பட்டது. 12 மீ. கற்களை நன்கு செதுக்கி நிர்மாணிக்கப்பட்ட இந்த அணைக்கட்டு மிகுந்த வியப்பையே அளிக்கிறது. அக்காலத்து ஜங்கமர்கள் பொறி இயலில் இவ்வளவு மேம்பட்டவர்களா என்று அமைதியாக எண்ணுவது போல காவேரி இங்கு குறைந்த வேகத்தில் பாய்கிறது.

கஞ்சன கட்டேக் கருகே காவேரி நதி 20 மீ. உயரத்தி லிருந்து கீழே விழுந்து செல்கிறது. சுஞ்ச என்ற காட்டு வாசிகளின் தலைவன் இங்கு ஒரு அணைக்கட்டைத் கட்டினானாம். அதனால்தான் இந்த அணைக் கட்டிற்கு சுஞ்சன கட்டே என்ற பெயர் ஏற்பட்டதாம்.

இங்கு காவேரி வேகமாய்க் குறுகலான இடைவெளியில் பாய்வதால் இப்பகுதியை தனுஷ் கோடி எனக் கூறுகிறார்கள். இங்கு சீதா தேவி குளித்து வந்ததாகத் தலபுராணம் கூறுகிறது. இங்கு ஒரு மலைக் கோவிலும் இராமர் பெயரில் கட்டப் பட்டுள்ளது.



**சுஞ்சனகட்டே நீர் வீழ்ச்சி**



கிருஷ்ணராஜசாகர நீர்த்தேக்கம்

இப்போது காவேரி நதியில் கட்டப்படும் அணைக்கட்டுகள் இந்த ஆற்றின் நீரைத் தடுத்து பெரிய நீர்க் தேக்கங்களாக ஆகி வருகின்றன. இவற்றில் முக்கியமானது கிருஷ்ண ராஜ சாகர அணைக்கட்டு. உபநதிகளான ஹேமவதி லக்ஷ்மண தீர்த்தம் என்பன காவேரியுடன் சேரும் இப்பகுதியில் தான் கண்ணம்பாடி என்ற கிருஷ்ண ராஜ சாகர அணை நிர்மாணிக்கப்பட்டுள்ளது.

ஒரு பெரிய மனிதரின் கனவே நனவாகி இந்த அணை உருவாகியது. அவர் தான் மாபெரும் பொறிஇயல் மேதை சர்.எம். விஸ்வேஸ்வரய்யா. ஆங்கில அரசு இவருக்கு 'சர்' பட்டத்தையும் விடுதலையடைந்த பின் நம் நாடு பாரத ரத்தினப் பட்டத்தையும் அளித்து கௌரவித்தன. பெரிய பெரிய நீர்த் தேக்கங்களை அமைப்பதில் இவர் வல்லவர். பம்பாய் மாகாணத்தில் 25 ஆண்டுகள் பணிபுரிந்து விட்டு இவர் 1909ல் மைசூர் சமஸ்தானத்தின் தலைமைப் பொறியாளராகப் பதவி ஏற்றார். புனாவிற்கருகே 1903ல் கடக் வாசலா அணையில் தானே இயங்கும் கதவுகளை (ஆடோ மேடிக் ஸ்லூய்ஸ்) அமைத்துக் கொடுத்து இவர் புகழ் பெற்றார். நீர்த் தேக்கத்தின் கொள் அளவிற்கு மேல் தண்ணீர் வரத் தொடங்கினால் இக் கதவுகள் தாமே திறந்து கொண்டு அதிகமான நீரை வெளியேற்றிவிடும். அதிக நீர் வெளியேறிய பின் இக்கதவுகள் தாமே மூடி விடும். தான் கண்டுபிடித்துக் கண்டு பிடிப்பை இவர் 'பேடண்ட்' செய்து கொண்டாலும் அதற்குக் கிடைக்கும் ராயல்டி தொகையை ஏற்க மறுத்தார். நீர்ப் பாசனத்தை ஒழுங்குபடுத்தி விவசாயம் நன்கு நடைபெற இவர் 'ப்ளாக்' விவசாய முறையைப் புகுத்தினர்.



பிருந்தாவன் கார்டன்

கண்ணம்பாடி அணைக்கு 35 கி.மீ. தூரத்தில் சிவ சமுத்திரத்தில் அங்குள்ள நீர் வீழ்ச்சியால் இந்தியாவிலேயே முதன் முதலாக நீர் மின் சக்தி உற்பத்தியாக்கப் பட்டது. அங்கிருந்து கோலார் தங்கச் சுரங்கங்களுக்கு மின் சக்தி வழங்கப்பட்டது. ஆனால் கோடை காலத்தில் இந்த மின் சக்தி கிடைப்பதில் தட்டுப்பாடு ஏற்பட்டும் சில சமயங்களில் முற்றிலும் கிடைக்காதும் போய் விட்டது.



கோலார் தங்கச் சுரங்கத்தில் தொழிலாளிகள்

கோலார் தங்கச் சுரங்க நிர்வாகம் இக்குறையை விஸ்வேஸ்வரய்யா விடம் கூறி மின் சக்தி தடைப்படாமல் தனக்குக் கிடைக்குமாறு ஏற்பாடு செய்யும் படி வேண்டியது. அவரும் நன்கு யோசித்து யாவருக்கும் பயன்படும்படி ஒரு திட்டம் தீட்டினார். அதற்குக் காவேரி நதியில் ஒரு பெரிய அணைக் கட்டுகட்ட வேண்டுமென மைசூர் மன்னரிடம் அவர் தெரிவித்தார். அதற்கு 2.5 கோடி ரூபாய்கள் செலவாகும். இது அந்த சமஸ்தானத்திற்கு மிகப் பெரிய செலவு. அதைக் கேட்ட மன்னர் கிருஷ்ண ராஜ உடையார் திடுக்கிட்டாராயினும் அத்திட்டத்தை அமல் படுத்த அனுமதி அளித்து விட்டார்.

கண்ணம்பாடி அணைகட்ட 1911ல் வேலை ஆரம்பமாகியது. அணைக் கட்டின் நீளம் 2621 மீ. உயரம் 15 மீ. எனத் திட்டமிடப்பட்டது. இது 1400 மில்லியன் கன மீட்டர் நீரைத் தேக்கி வைக்கக் கூடியது. 1915ல் அணையின் உயரத்தை 24 மீ. என்று அதிகரித்தார்கள். இதனால் கோலார் தங்கச் சுரங்கங்களுக்குத் தடையின்றி மின் சக்தி கிடைத்தது. 1924ல் அணை வேலை முடிவுற்றது. இந்த அணை சிமிண்டால் கட்டப்படாமல் சுடப் பட்ட செங்கலையும் சுண்ணாம்பையும் சேர்த்து நன்கு அரைக் கப்பட்ட 'சுர்க்கி' என்ற கலவையால் கட்டப்பட்டது. சுர்க்கி உலர்ந்து இறுகச் சற்று தாமதமானாலும் சிமெண்ட்டை விடப் பத்து மடங்கு உறுதியாக்குவது. இதனால் கண்ணம்பாடி அணை நன்கு உறுதி பெற்றது.



இந்த நீர்த் தேக்கத்திற்கு மன்னரின் பெயரான கிருஷ்ண ராஜர் பெயரைச் சூட்டினார்கள். அணைக்கட்டிற்கு 18 மீ. கீழே 'பிருந்தாவன் கார்டன்' அமைக்கப்பட்டது. 1928ல் அமைக் கப்பட்ட இது நம் நாட்டில் மற்ற நீர்த் தேக்கங்களருகே கார்டன்கள் அமைக்க முன்னோடியாகியது.

மூன்று அடுக்குகளில் எட்டு ஹெக்டர் நிலப் பரப்பில் அமைந்த இப்பூங்காவை பொது மக்கள் காண 1936 முதல் அனுமதிக்கப்பட்டு வருகிறது.

இந்த நீர்த் தேக்கத்திலிருந்து 18 மீ ஆழக் கால்வாய் 45 கி.மீ. தூரம் பாய்ந்து விவசாயத்திற்கு உதவுகிறது. சுமார் 36,000 ஹெக்டேர் வயல்கள் இதனால் பயன் பெறுகின்றன. இம்மாபெரும் திட்டத்தை நிறைவேற்ற 10,000 தொழிலாளர்களும் நூற்றுக் கணக்கான பொறியாளர்களும் இரவும் பகலுமாக உழைத்தனர்.

இப்பகுதியில் அணையைக் கட்ட விஸ்வேஸ்வரய்யா மட்டும் யோசிக்கவில்லை. இதற்காக அஸ்திவாரம் போடப் பள்ளம் தோண்டிய போது அங்கு 1794ல் அடிக்கல் நாட்டப்பட்ட விவரம் கிடைத்தது. ஒரு கல்லில் பாரசீக லிபியில் இவ்வாறு செதுக்கப்பட்டிருந்தது. ''கருணைக் கடலான கடவுளின் பெயரால் அவரது தொண்டனான ஹஜ்ரத்திப்பு சுல்தான் காவேரி நதியில் அணைகட்ட தலை நகருக்கு மேற்கே அஸ்திவாரம் போடுகிறேன். ஆரம்பிப்பது என் வேலை இதை முடித்துக் கொடுப்பது அக்கடவுளின் வேலை.''

**சர்.எம். விஸ்வேஸ்வரய்யா**

மைசூர் சமஸ்தான திவானாக இருந்த விஸ்வேஸ்வரய்யா மைசூரின் முன்னேற்றத்திற்கு அரும்பாடு பட்டார். பத்ராவதி அயர்ன் அண்ட் ஸ்டீல் ஒர்க்ஸ், மைசூர் பல்கலைக்கழகம், அரசாங்க சோப் பாக்டரி, போன்ற பல அமைப்புகளை இவர் நிறுவினார். அவர் திவானாக 1912 முதல் 1918 வரை இருந்த போது கல்விக் கூடங்களின் எண்ணிக்கை இரு மடங்காகியது. அதற்கு முன் அவர் தலைமைப் பொறியாளராக இருந்தார். இந்தியாவின் முன்னேற்றம் அதன் தொழில்களின் அடிப்படையில்தான் உள்ளது. என அவர் உறுதியாக நம்பினார். நம் நாடு சுதந்திரமடைந்து ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்ததற்கு வெகு காலத்திற்கு முன்பே இவர் திட்டங்கள் பற்றி பல நூல்களை எழுதினார். இவர் தம் முதுமையிலும் கூட மிக சுறுசுறுப்பாகச் செயல் பட்டு வந்தார். 86வது வயதில் 75 அடி உயரக் கட்டட மாடிப் படிகளில் பிறர் உதவி இல்லாமலே ஏறிச் சென்று வந்தார். கடைசி வரை இவர் உடல் நலம் குன்றாமல் திடகாத்திரராகவே இருந்து வந்தார்.



**சர். எம். விஸ்வேஸ்வரய்யா**



**நான்காவது கிருஷ்ணராஜ உடையார்**



# சமாதானம் வேண்டும்

முருகனும் செல்வியும் கணவனும் மனைவியும் ஆவர். அவர்கள் அற்ப விஷயங்களுக்குக் கூட எப்போதும் சண்டை போட்டுக் கொண்டே இருப்பது வழக்கம். அவர்களது ஓயாத சண்டைகளைக் கண்டு அக்கம் பக்கத்தவர்கள் சண்டை வேண்டாம், சமாதானமாகப் போங்கள் என்று அறிவுரை கூறியும் அவர்கள் அவற்றையெல்லாம் லட்சியம் செய்யாமல் தம் போக்கிலேயே சண்டை போட்டுக் கொண்டுதான் இருந்தார்கள்.

இத் தம்பதிகளுக்கு வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு மாணிக்கம் என்று பெயரிட்டு அவர்கள் அவனைப் பிரியமாகப் வளர்ந்து வந்தார்கள். ஆனாலும் அவர்களிருவரும் சண்டை போட்டுச் கொள்வது மட்டும் நிற்கவில்லை. மாணிக்கம் வளர்ந்து விவரம் தெரியும் வயதை அடைந்ததும் தன் பெற்றோர் அநாவசியமாகச் சண்டை போட்டுக் கொள்வதைக் கண்டு மனம் வெதும்பினான். ஊரார் அவர்களைப் பற்றி கேலியாகப் பேசுவதை அவனால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

அவர்களை எப்படி மாற்றி நல்வழிப் படுத்துவது என்றே பனிரெண்டு வயதான மாணிக்கம் யோசிக்கலானான். அவன் மாடுகளை மேய்க்க ஓட்டிக் கொண்டு போன போது கூட ஓரிடத்தில் உட்கார்ந்து இதுபற்றியே யோசிக்கலானான். ஒரு நாள் அவ்வூர் மாந்திரீகர் மருதப்பர் அவனைக் கண்டு ''ஏனப்பா கவலையுடன் இருக்கிறாய்?'' என்று கேட்டார்.

மாணிக்கமும் தன் பெற்றோர் விஷயத்தைக் கூறவே அவரும் ''உன் பெற்றோரின் இயல்பு மாற நீயும் கொஞ்ச நாட்களுக்கு சற்று மாறியது போல இருக்க வேண்டும். அதற்கு ஒரு வழி சொல்கிறேன்'' என்று கூறி அவன் காதில் ரகசியமாக ஏதோ சொல்லி விட்டுச் சென்றார்.

—எஸ். சோபினி—



அன்று மாலை மாடுகளை வீட்டிற்கு ஓட்டி வந்த பின் மாணிக்கம் தன் தாயாரிடம் ''அம்மா! என் சட்டையைத் துவைத்து உலர்த்தி எடுத்து வைக்கும் படி காலையில் உன்னிடம் சொல்லி விட்டுப் போனேனே. மறந்து விட்டாயா? உனக்கு ஒரு மகன் இருக்கிறான் என்பதாவது நினைவில் இருக்கிறதா?'' என்று உரக்கக் கூவினான்.

செல்லியோ ''என்னிடம் காலையில் நீ எதுவுமே சொல்லிவிட்டுப் போகவில்லையே'' எனவே மாணிக்கம் ''எல்லாம் சொல்லிவிட்டுத்தான் போனேன். நீதான் நான் சொன்னதைச் செய்ய வில்லை'' என்று கோபத்தோடு கூறினான்.

அவன்கத்தியதைக் கேட்ட செல்லி திடுக்கிட்டு ''இவன் ஏன் இப்படிக் கத்துகிறான்? காலையில் எதுவும் என்னிடம் இவன் சொல்லவில்லையே. ஏன் திடீரென இப்படி மாறினான்?'' என்று எண்ணியவாறே சாமான்கள் வாங்கக் கடைக்குச் சென்றாள்.

இதற்குச் சற்று நேரத்திற்குப் பின் முருகன் வயலிலிருந்து வீட்டிற்கு வந்தான். அப்போது மாணிக்கம் முகத்தை உம்மென்று வைத்துக் கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பதை அவன் பார்த்து ''என்னப்பா இப்படி இருக்கிறாய்? உடம்பு சரி இல்லையா?'' என்று பரிவுடன் விசாரித்தான். மாணிக்கமும் ''உடம்புக்கு ஒன்றுமில்லை. ஆனால் நாலு பேருக்கு முன் தலை நிமிர்ந்து நிற்கத் தான் முடியவில்லை'' என்று வெறுப்புடன் கூறினான்.

முருகனும் ''ஏன் நிமிர்ந்து நிற்க முடியவில்லை?'' என்று கேட்கவே மாணிக்கமும் ''நான் உடுத்திக் கொள்ள நல்ல துணி மணிகள் உள்ளனவா? முள்ளிலும் வெயிலிலும் நடக்கிறேனே. காலில் அணிய செருப்பு உண்டா? உங்கள் ஒரே மகனான எனக்கு இவற்றை எல்லாம் கொடுக்கக் கூடாதா?'' என்று கேட்டான்.

இதைக் கேட்ட முருகன் ஆடிப் போனான். ஒருநாளும் வாய் திறந்து உரக்கப் பேசாத மாணிக்கமா இப்படிக் கூறுகிறான் என்று அவன் ஆச்சரியப்பட்டான். இதற்குள் கடைக்குப் போன செல்லி திரும்பி வந்தாள். அவள் வெளியிலிருந்தவாறே முருகனும் மாணிக்கமும் பேசியதைக் கேட்டாள். அன்றிரவு சாப்பிடும் போது கூட மாணிக்கம் தன் பெற்றோர் மீது சீறி விழுந்தான். அவன் மருதப்பர்

கூறியபடித்தான் அப்படியெல்லாம் செய்தான். இப்படியே ஒருவாரம் நடந்தது.

ஒருநாள்செல்லி முருகனிடம் ''நம் மகனை ஏதோ பேய் பிடித்து ஆட்டு கிறது. மாந்திரீகர்மருதப்பரைக்கூட்டி வந்து மந்திரிக்க வேண்டும்'' என்றாள். முருகனோ ''மாந்திரீகர்எதற்கு? நான் வைத்தியரை அழைத்து வந்து மருந்து கொடுத்து இவனைச் சரிப்படுத்தி விடுகிறேன்'' என்றான். வைத்தியரா, மாந்திரீகரா என்று இருவரும் சண் டையை ஆரம்பித்தார்கள்.

வெகு நேரம்அவர்களைச்சண்டை போட விட்டு விட்டு மாணிக்கம் ''நீங்கள் அநாவசியமாகச் சண்டை போடுகிறீர்கள். எனக்கு உடம்பிற்கு ஒன்றும் இல்லை. நான் வைத்தியரி டம் வரவும் மாட்டேன். மருந்து எது வும்சாப்பிடவும் மாட்டேன். என்னை மாந்திரீகரிடம் அழைத்து போவதா னால் நான் வருகிறேன்'' என்றான்.

அது கேட்டு அவனது பெற்றோர்கள் அவன் மாந்திரீகரிடம் வருவதாகச் சொன்னது போதும் என எண்ணி சந்தோஷத்துடன் மருதப்பரிடம் அவனை அழைத்துச் சென்றார்கள். மருதப்பரும் முருகனும் செல்லியும் சொன்னதைக் கேட்டுவிட்டு ''உங்கள் மகனை குணப்படுத்துகிறேன். அதற்கு முன் உங்கள் இருவரிடமும் தனித்தனியாக நான் பேசவேண்டும். நான் கேட்கும் கேள்விக்கு நீங்கள் சரியான பதிலைச் சொன்ன பிறகே மந்திரிப்பேன்'' என்றார்.

அவர் முதலில் முருகனைத் தனி யாக அழைத்துப் போய் ''மாணிக் கம் உன் மகன் தானே?'' என்று கேட் டார். அவனும் 'ஆம்' எனவே அவனைஅனுப்பிவிட்டு செல்லியை அழைத்து ''மாணிக்கம் உன் மகன் தானே'' என்று கேட்டார். அவளும் 'ஆம்' என்றே கூறினாள்.

அதன்பின் மருதப்பர்அவர்கள் இரு



வரையும் ஒன்றாக அழைத்து ''நீங்கள் இருவரும் சரியான விடை கூற வில்லை. ஒருவாரம் அவகாசம் கொடுக்கிறேன். யோசித்து வந்து பதிலைச் சொல்லுங்கள்'' என்று கூறி அவர்களை அனுப்பி விட்டார். ஒரு வாரம் கழிந்ததும் முருகனும் செல்வியும் மருதப்பரைக் காண வந்தார்கள்.

இம்முறை முருகன் ''அவன் செல்வியின் மகன்'' என்றான். செல்வி மட்டும் ''அவன் என் மகன்தான்'' என்றாள். அம்முறையும் அவர்கள் கூறியது சரி இல்லை என்று கூறி ''மேலும் ஒரு வார அவகாசம் தருகிறேன். நன்கு யோசித்து விட்டு வந்து பதிலைக் கூறுங்கள்'' என்று சொல்லி அவர்களை மருதப்பர் அனுப்பி விட்டார்.

அப்போது அவர்கள் இருவரும் சமாதானமாய் சண்டையிடாமல் கலந்து யோசித்து விட்டு வாரக் கடைசியில் மருதப்பரைக் காண சென்றார்கள். அப்போது மருதப்பர் கேட்ட கேள்விக்கு அவர்களும் ''மாணிக்கம் எங்கள் மகனே'' என்று விடை கூறினார்கள்.

மருதப்பர் பலமாகச் சிரித்து ''இப்போது தான் நீங்கள் இருவரும் சரியான விடையைக் கூறினீர்கள். இது வரை உங்கள் இருவரையும் பிடித்திருந்த பேய் போய் விட்டது. இந்த ஒரு வாரகாலம் நீங்கள் இருவரும் சண்டை போடாமல் கலந்து பேசி ஒரே விடையைக் கூறினீர்கள். இது போல சண்டை போடாமல் இருந்தால் வாழ்க்கையை நிம்மதியாகக் கழிக்கலாம். இனிமேலாவது இது போல எல்லா விஷயங்களையும் நீங்கள் சண்டை போடாமல் சமாதானமாகப் பேசி ஒரு முடிவுக்கு வாருங்கள். உங்கள் மகனை எந்தப் பேயும் பிடித்து ஆட்டவில்லை. உங்களிடையே சமாதானம் நிலவவே என் யோசனைப்படி சற்று மாறுபட்ட விதமாய் நடித்தான். உங்கள் சண்டைகளால் மாணிக்கம் நிம்மதியாக இருக்க முடியவில்லை. இனிமேல் நீங்கள் எல்லோரும் சுகமாக இருப்பீர்கள்'' என்றார்.

முருகனும் செல்வியும் தம் தவறு என்ன என்று உணர்ந்தார்கள். அப்போது முதல் அவர்கள் தமக்குள் சண்டை போடுவதை விட்டு விட்டு அமைதியான முறையில் தம் மகனோடு இனிது வாழ்ந்து வந்தார்கள்.



ஆங்கிலேயர்களை எதிர்த்த வீரர்கள்

7

# வேலுத் தம்பி

கருத்து: **மீரா உத்ரா** ஓவியம்: **டி.ஜி. ஷெட்டி**















மெக்காலேக்கு இப்படிக் கடிதம் அனுப்பி விட்டு வீரர்கள் குன்னிப் பிள்ளை தலைமையில் மூடு படகுகளில் ரகசியமாகச் சென்றனர்.



தம்பியின் வீரர்கள் 1808 டிசம்பர் 23 நள் ளிரவில் மெக்காலேயின் இருப்பிடத்தைத் தாக்கின. மெக்காலே திகைத்துக் போனான்.




வீரர்கள் மெக்காலேயின் வீட்டைச் சூறையாடினார் கள். அங்குள்ள ஆவணங்களைக் கொளுத்தினார் கள். மெக்காலே எப்படியோ தப்பி ஓடி விட்டான்.




மறுநாள் ஆலப்புழையிலும் கொல்லத்திலும் இருந்த ஆங்கிலப் படை வீரர்கள் தாக்கப் பட்டனர்.



தம்பி கொல்லத்திற்குச் சற்றுக் கிழக்கிலு ள்ள குண்டராவைப் போய் அடைந்து அங்கிருந்து ஒரு பிரகடனம் செய்தான்.




நம் வீடு, சொத்து முதலிய
வற்றைக் காப்பாற்றிக் கொள்ள ஆங்
கிலேயர்களை விரட்டுங்கள் என்று
வேலுத் தம்பி எடுத்துரைத்தான்.


வேலுத் தம்பி கூறியதைக் கேட்டு ஆவேசம் கொண்டு மக்
கள் ஆங்கிலேயர்களுக்கு எதிராகக் கலகம் புரியலானார்கள்.


மக்கள் தம்மை எதிர்க்கிறார்கள் என்ற செய்தி
கம்பெனியின் தலைமை இடமான சென்னைக்குக்
கிடைத்தது. கொல்லத்திற்கு உதவ நாலா பக்கத்தி
லிருந்தும் படைகள் அனுப்பப்பட்டன.


1889 ஜனவரி 18ல் சுமார் அரை மணி நேரம்
நடந்த துப்பாக்கிச் சூட்டில் தம்பியின் படை
அழிந்து விட்டது.


சில வாரங்களுக்குப் பின் பிப்ரவரி 12ல் வேலுத்தம்பி
ஆராம் பொலிக்கருகே மீண்டும் தோல்வியுற்றான்.


ஐயோ! எல்லாம் இழந்தோமே!
கொச்சி அமைச்சர் பாலியத்மேனன்
சொல் தவாறமல் படைகளை மட்டும்
அனுப்பி இருந்தால் ஆங்கிலேயர்
களைத் தோற்கடித்திருப்பேன்!


ஆங்கிலப் படை திருவனந்தபுரத்தை அணுகிய போது தம்பி திருவாங்கூர் மன்னரைக் கடைசி முறையாகக் கண்டான்.
விடை பெற்றுக் கொள்ள வந்தேன். இது நான் ஆங்கிலப் பிரதிநிதிக்கு எழுதிய கடிதம். இந்தப் பகைமைக்கு நான் தான் காரணம். உங்களுக்குத் தெரிவிக்காமல் எல்லா வேலைகளையும் நானே செய்தேனென எழுதி இருக்கிறேன். என்னால் உங்களுக்கும் மக்களுக்கும் தீங்கு ஏற்படக் கூடாது.


ஆனால் தம்பியின் கடிதம் மெக்காலேக்குத் திருப்தி அளிக்கவில்லை.
நீங்களே தளவாயைத் தேடிக் கண்டு பிடித்து சிறைப் பிடிக்க வேண்டுமென மெக்காலே கட்டளை இட்டான்.


மன்னர் தம் ஆட்களை அனுப்பி தம்பியைத் தேடினார். தம்பி மாறு வேடத்தில் தப்பித் திரிந்தான். முடிவில் அவனும் அவன் தம்பியும் ஒரு கோவிலில் இருப்பது தெரிந்தது.
வெளியே வீரர்கள் நடமாட்டமா? நான் சிறைப்படக் கூடாது இது அவமானம்.


கொல் என்னை!
முடியாது. என்னால் முடியாது


தம்பி கத்தியால் தன்னைக் குத்திக் கொண்டு கீழே விழுந்தான். ஆனால் அவனது உயிர் போகவில்லை பிறகு...
சட்டென என் தலையை வெட்டடா!
அவனது தம்பி அவ்வாறே செய்தான். வேலுத்தம்பி தலை நிமிர்ந்து பல செயல்களைச் செய்து புகழ் பெற்றது போல வீர மரணம் எய்தும் புகழ் பெற்றான்.




# மகாபாரதம்

சஞ்சயன் பாண்டவர்களிடம் தூது போய் விட்டு ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பி வந்தான். அவன் திருதராஷ்டிரனிடம் ''தரும புத்திரன் நீங்கள்தாம் அநீதிகளைப் புரிந்ததாகக் கூறுகிறான். எனவே அவன் கூறியவற்றை நாளை அரச சபையில் எல்லோர் முன்னிலையிலும் கூறுகிறேன்'' என்று கூறிவிட்டுத்தன் இல்லத்திற்குச் சென்றான்.

சஞ்சயன் போனதும் திருதராஷ்டிரன் விதுரரை அழைத்து ஆலோசனை கேட்டான். விதுரரும் சஞ்சயன் என்ன சொன்னான் என்று கேட்டுத் தெரிந்து கொண்டு ''மன்னா! நீ நாட்டை ஆளும் ஆசையால் பொய் சொல்லாமலும் உன் வம்சம் அழியாமலும் பார்த்துக்கொள். துரியோதனன் மீது கொண்ட பாசத்தால் பாண்டவர்களை விலக்கி வைக்காதே. நாளுக்கு நாள் துரியோதனன் மோசமாகிக் கொண்டே போகிறான். பாண்டவர்களை வாழ விடு. அவர்களுக்கு நாட்டின் ஒரு சிறு பகுதியையாவது கொடு'' என்றார்.

திருதராஷ்டிரனும் ''நான் ஒருப்போதும் பாண்டவர்களுக்கு கெடுதலை நினைக்க மாட்டேன். அவர்களுக்கு நல்லதையே செய்ய விரும்புகிறேன். ஆனால் துரியோதனனின் நினைவு வந்தால் என் புத்தி தடுமாறுகிறது. இது ஏன் என்று எனக்குத் தெரியவில்லை. எல்லாம் கடவுளின் செயல்'' என்றான்.

மறுநாள் அரசசபை கூடியது. சபையில் எள் போட்டால் கீழே விழாதபடி அவ்வளவு கூட்டம் கூடி இருந்தது. துரியோதனனுக்குப் போரில் உதவ வந்த மன்னர்களும் சஞ்சயன் பாண்டவர்களிடமிருந்து என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறான் என அறிய ஆவலுடன் இருந்தார்கள்.

சஞ்சயன் அரச சபைக்குள் வந்து எல்லோரையும் வணங்கினான். பிறகு

—கர்ணனின் சபதம்—



அவன் ''மன்னர்களே! நான் பாண்டவர்களைப் பார்த்து விட்டு வந்தேன். அவர்கள் தங்கள் வணக்கங்களை உங்களுக்கு தெரிவிக்கச் சொன்னார்கள். அவர்கள் நலமாகவே இருக்கிறார்கள். அவர்களிடம் மன்னர் திருதராஷ்டிரர் சொல்லச் சொன்னதையும் கூறினேன்'' என்று கூறி விட்டு இவ்வாறு கூறலானான். ''அர்ஜுனன் கூறியது இதுதான்: துரியோதனன் முதலானோர் பல பாவங்களைச் செய்துள்ளார்கள். ஆனால் அவற்றைப் போக்கிக் கொள்ள பரிகாரம் எதுவும் செய்யவில்லை. போர் ஏற்பட்டால் அவர்கள் அப்பாவங்களின் பலனை அனுபவிக்கத்தான் போகிறார்கள். தருமர் தன் கோபத்தை எல்லாம் அடக்கிக் கொண்டிருக்கிறார். அது வெளிப்பட்டால் அதன் கனலில் கௌரவர்கள் எரிந்து சாம்பலாகி விடுவார்கள். அண்ணன் பீமன் தன் கதையைச் சுழற்றி கௌரவர்களை அழிக்கும் போது துரியோதனனால் என்ன செய்ய முடியும்? நகுலன், சஹதேவன், விராடன், துருபதன், உப பாண்டவர்கள் அபிமன்யு, நான் ஆகிய யாவரும் சேர்ந்து தாக்கு தலை நடத்தும் போது துரியோதனன் அலறத்தானே அலறுவான். நாங்கள் போர் புரிவது எம் நாட்டைத் திரும்ப பெறவேதான். போர் மட்டும் மூண்டால் திருதராஷ்டிரனின் வம்சமே அழிந்து விடும். ஏனெனில் நியாயம் எங்கள் பக்கம் உள்ளது. கர்ணன், துரியோதனன், துச்சாதனன் முதலிய யாவருமே உயிர் தப்ப முடியாது.

இவ்வாறு சஞ்சயன் கூறியதும் பீஷ்மர் துரியோதனனிடம் ''நீ, கர்ணன், சகுனி, துச்சாதனன் ஆகியோரின் பேச்சைக் கேட்டுக் கெட்டுப் போகிறாய். இந்த போர் நடக்காமல் சமாதானமாகப் போ. இல்லாவிட்டால் நீங்கள் எல்லோரும் அழிந்தே போவீர்கள்'' என்றார்.

இதைக் கேட்ட கர்ணன் கோபம் கொண்டு எழுந்து ''பிதாமகரே! உங்களைத் தவிர வேறு யாராவது என்னைப் பற்றி இப்படிக் கூறி இருந்தால் அவனை உயிருடன் விட்டிருக்க மாட்டேன். துரியோதனனை விட்டு ஒரு நாளும் பிரிந்து போய் விட மாட்டேன். போரில் நான் ஒருவனே பாண்டவர்களை வென்று விடுவேன். அவர்கள் ஆரம்பத்திலிருந்தே எம் எதிரிகள். அவர்களுடன் சமாதானமா? திருதராஷ்டிர மன்னரும் துரியோதனனும் விரும்புவதையே நான் செய்வேன்''

என்று கூறினான்.

அப்போது பீஷ்மர் திருதராஷ்டிர னிடம் ''இந்த கர்ணன் பாண்டவர் களைவென்று விடுவதாயும் கொன்று விடுவதாயும் அடிக்கடி கூறிக் கொண்டே இருக்கிறான். பாண்டவர் களைப் போல இவனால் செயல் படவே முடியாது. பேடியும் கயவனு மான இவன் பாண்டவர்களைத் தாழ்த்திப் பேசுகிறான். விராட நகரில் மாடு பிடி சண்டையில் இவன் தம் பியை அர்ஜுனன் கொன்ற போது இவன் எங்கே போயிருந்தான்? வன யாத்திரையில் கந்தர்கள் துரியோ தனனைப் பிடித்துக் கொண்டு போன போது இவன் கைகள் என்ன செய்து கொண்டிருந்தன? பாண்டவர்கள் தானே அவனை விடுவித்தார்கள்? கர்ணன் வெறும் வாய்ச் சொல் வீரனே. கையாலாகாதவன். இவன் கூறுவதை லட்சியம் செய்ய வேண் டாம்'' என்றார்.

திருதராஷ்டிரனோ பீஷ்மர் சொன்னதைக் கேட்டு எதுவும் கூறா மல் சஞ்சயனிடம் தருமர் என்ன சொன்னார் என்று கேட்டான். தரும ருக்கு உதவி புரிய வந்துள்ள மன்னர் களெல்லாம் யார் யாரென்று சஞ்சயன் கூறி தருமர் போருக்குத் தயாராக இருப்பதாகவே சொன்னான். திருத ராஷ்டிரன் அடுத்து பீமனைப் பற்றி நினைக்கலானான். பீமன் என்றாலே அவனது உடல் நடுங்கியது. ஏனெ னில் எவ்வளவு பெரிய படையானா லும் அது பீமனின் முன் நிற்க முடி யாது. பீமனின் பலம் அவனுக்குத் தெரியும்.

இவ்வாறு யோசித்து அவன்



''போரினால் எவ்விதப் பயனும் இல்லை. போர்புரியாமல் இருந்தால் தான் எல்லோருக்கும் நன்மை ஏற் படும் என்று தெரிகிறது. எல்லோரும் சம்மதித்தால் நாம் சமாதானத்திற்கு முயற்சி செய்வோம்'' என்றான். அப் போது சஞ்சயன் திருதராஷ்டிரரிடம் ''இவ்வளவு சிக்கல்களுக்கும் கார ணம் நீங்கள்தான். குரு, ஜாங்கூல நாடு களைத் தவிர மற்ற நாடுகளை எல் லாம் பாண்டவர்கள்தானே வென்று உங்களுக்குக் கொடுத்தார்கள்? அவற்றையெல்லாம் உங்களது சொந்த மாக்கிக் கொண்டு விட்டீர்கள். அவை உங்களுடையவை அல்லவே! உங்கள் பக்கம் இருந்த மன்னர்களெல்லாம் பாண்டவர்களின் வலிமை கண்டு அவர்கள் பக்கம் சேர்ந்து விட்டார் கள். துரியோதனனை நீங்கள் அடக்கி



வரே போதுமே. அவருடன் துரோண ரும் அசுவத்தாமனும் நம் பக்கம் இருக் கும் போது நம்மால் அர்ஜுனனைக் கொல்ல முடியாதா? கர்ணனிடம் இந் திரன் கொடுத்த சக்தி ஆயுதம் உள்ளது. பாண்டவர்களின் படையில் உண்மை யான வீரர்கள் எனப்படுவோர் பாண்ட வர்களும், திருஷ்டத்யும்னனும், சாத் தியகியும் மட்டுமே ஆவர். நம் பக்கத் திலோ அவர்களைப் போல எவ் வளவோ வீரர்கள் இருக்கிறார்கள்'' என்றான்.

பிறகு அவன் சஞ்சயனிடம் ''பாண் டவர்களின் போர் அணிகள் எவ்வாறு அமைக்கப்படுகின்றன?'' என்று கேட்க சஞ்சயனும் கௌரவ வீரர் களை எதிர்க்க யார் யார் பாண்டவர் பக்கத்தில் தேர்ந்தெடுக்கப்பட் டுள்ளார்கள் என்பதைக் கூறினான்.

வைக்காவிட்டால் உங்களுக்கு ஆபத்துதான்'' என்றான்.

அப்போது துரியோதனன் தன் தந்தையிடம் ''தந்தையே! நாங்கள் தோற்றுப் போய் விடுவோமென்று நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? நாங் கள் கண்டிப்பாக வெற்றி பெறுவோம். உங்களையும் விதுரரையும் தவிர மற்றவர்கள் எல்லாம் கொல்லப்பட வேண்டும் என்பதே அந்தக் கிருஷ்ண னின் நோக்கம். பாண்டவர்களால் வெற்றி பெற முடியும் என்றால் அவர் கள் ஏன் ஐந்து ஊர்களை மட்டுமாவது கொடுங்கள் என்று கேட்க வேண்டும்? பீமனை நினைத்துக் கொண்டு நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? என் கதாயுதத் தின் ஒரு அடி அவனை எமலோகத் திற்கு அனுப்பி விடும். பாண்டவர் களின் படைகளை அழிக்க பீஷ்மர் ஒரு

அதை எல்லாம் கேட்ட திருதராஷ் டிரன் வெலவெலத்துப் போய் துரி யோதனனிடம் ''மகனே! போர் புரி யும் எண்ணத்தை விட்டு விடு. சமா தானத்தை நாடினால் உன்னை எல் லோரும் புகழ்வார்கள். நீ சுகமாக வாழ பாதி ராஜ்ஜியமே போதும். பாண்டவர்களுக்கு நாட்டில் ஒரு பகுதி யைக் கொடுத்து விடு. மதி கெட்டுப் போய் வீணாக அழிவைத் தேடிக் கொள்ளாதே'' என்றான்.

துரியோதனனோ ''நான் யார் பேச் சையும் கேட்கப் போவதில்லை. பாண்டவர்களை வெல்ல எனக்கு வேறு யாருடைய உதவியும் தேவை இல்லை. கர்ணனும், துச்சாதனனும் இருக்கிறார்கள். அவர்களே போதும். நாங்கள் மூவரும் சேர்ந்து பாண்டவர் களை எல்லாம் கொன்று விட முடி

யும். அவர்களும் நாங்களும் ஒன்றாக இருப்பது என்பது முடியவே முடியாது. அந்தப் பாண்டவர்களுக்கு நான் ஊசி முனை இடம் கூடக் கொடுக்கத் தயாராக இல்லை'' என்று கர்வமாகக் கூறினான்.

கர்ணனும் துரியோதனன் சொன்னதை ஆமோதித்து போர்புரிய முழுப் பொறுப்பையும் தானே ஏற்றுக் கொண்டு தானே பாண்டவர்களை எல்லாம் ஒழித்து விடுவதாக வீரம் பேசினான். அதைக் கேட்ட பீஷ்மர் முகத்தைச் சுளித்தார். பிறகு அவர் ''கர்ணா! நீ அறிவு தடுமாறி இப்படி வார்த்தைகளைக் கொட்டுகிறாய். அர்ஜுனனின் பராக்கிரமும் கிருஷ்ணரின் சக்தியும் எவ்வளவு என்பதை நீ நன்கு அறிவாய். அப்படி இருந்தும் ஏன் இப்படித் தற்பெருமை கொள்கிறாய்? இது வீரனின் செயலல்ல. ஒரு தொடை நடுங்கியின் செயல்'' என்று கடிந்து கொண்டார்.

இது கர்ணனுக்கு அவமானமாகப் பட்டது. அதனால் பீஷ்மரிடம் அவன் ''நீங்கள் கூறுவது போல கிருஷ்ணர் மிகப் பெரிய மனுஷர்தான். ஆனால் என்னை இப்படி இழிவாகப் பேசியதை நான் சகித்துக் கொள்ள மாட்டேன். நீங்கள் போர்க்களத்தில் இருக்கும் வரை நான் அங்கு வரவும் மாட்டேன். ஆயுதங்களைத் தொடவும் மாட்டேன். உங்களுக்குப் பின்தான் என் பராக்கிரமத்தை வெளிப்படுத்துவேன். அதைக் கண்டு மற்றவர்கள் வியப்படையப் போகிறார்கள்'' என்று கூறிவிட்டு சபையிலிருந்து வெளியே சென்று விட்டான்.

பீஷ்மர் ஏளனமாகச் சிரித்தவாறே



துரியோதனனிடம் ''பார்த்தாயா! தன்னந்தனியாகவே பாண்டவர்களை வெல்வேன் என்று கூறிய மாவீரன் ஆயுதங்களைத் தொட மாட்டேன் என்று சபதம் செய்து விட்டுப் போய் விட்டான். இப்படிப்பட்டவனா எதிரிகளை எல்லாம் அழிக்கக் கூடியவன்? இதை நாம் நம்பவும் வேண்டுமா? இங்கு எவ்வளவோ மாவீரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் முன்னிலையில் அவன் தற்பெருமை பேசியது சரியில்லை. தான் ஒரு அந்தணன் என்று பொய் சொல்லிப் பரசுராமரை ஏமாற்றி அஸ்திரங்களைப் பெற்றவன் தானே இவன்!'' என்று கூறினார்.

துரியோதனன் அப்போது ''பிதாமகரே! பாண்டவர்களும் எங்களைப் போன்றவர்களே. நாங்களும் அவர்களைப் போலப் போர்க் கலையில்

பயிற்சி பெற்றவர்களே. இப்படி இருக்க அவர்கள்தான் வெற்றி பெறு வார்கள் என்று எப்படிக் கூறலாம்? எனக்கு இந்தப் போரில் உங்கள் யாரு டைய உதவியும் தேவை இல்லை'' என்று பொரிந்து தள்ளினான்.

போர்புரியத் துடிக்கும் துரியோ தனனுக்கு விதுரர் ஒரு கதையைச் சொன்னார். ஒரு வேடன் வலையை விரிக்கவே அதில் இரண்டு பறவைகள் சிக்கிக் கொண்டன. ஆனால் அவை சற்றும் பயப்படாமல் வலையோடு உயரக்கிளம்பி பறக்கலாயின. அதைக் கண்ட வேடன் அவை செல்லும் வழி யிலே அவற்றின் கீழே தரை மீது ஓட லானான். அதைக் கண்டு ஒரு முனிவர் ''ஆகாயத்தில் பறக்கும் பறவை களைப் பிடிக்கத் தரை மீது ஓடுவதால் என்ன பயன்?'' என்று கேட்டார். வேடனும் ''அப்பறவைகள் ஒற்றுமை யாய் வலையோடு பறந்து செல்லும் வரை என் முயற்சி வீண்தான். ஆனால் அவை தமக்குள் சண்டை போட்டுக் கொண்டால் வலையோடு கீழே விழும். அப்போது அவற்றை நான் பிடித்துவிடுவேன்'' என்று சொல்லிக் கொண்டே ஓடினான். முடிவில் வேடன் எதிர்பார்த்தது போலத்தான் நடந்தது. அவன் அப் பறவைகளைப் பிடித்ததும் தன் வலையை எடுத்துக் கொண்டு சென்றான்.

விதுரர் இக் கதையைக் கூறி ''துரி யோதனா! உறவினர்கள் சொத்துக்காக சண்டை போட்டால் முடிவில் அழிவு தான் ஏற்படும். இன்னொரு சம்பவத் தையும் கூறுகிறேன். ஒருமுறை நாங் கள் வேடர்களுடன் கந்தமாதன பர்வ தத்திற்குச் சென்றோம். அங்கு ஆழ மான பள்ளத்தில் ஒரு தேன் கூடு இருந் தது. அந்தத் தேனை சாப்பிட்டால் குருடர்கள் பார்வை பெறுவார்களென் றும் மரணமே ஏற்படாது என்றும் அப் பகுதி மக்கள் நம்பினார்கள். எங் களோடு வந்த வேடர்கள் அந்த தேனுக்கு ஆசைப்பட்டு அப்பள்ளத் தில் இறங்கவே அங்கிருந்த விஷப் பாம்புகள் அவர்களைத் தீண்டின. அதனால் அவர்கள் எல்லோரும் இறந்து போனார்கள். தேனுக்காக ஆசைப்பட்டு அவர்கள் இறந்தது போல நாடு வேண்டும் என்று ஆசைப் பட்டு பாண்டவர்களோடு போர்புரிந் தால் நீயும் உன்னைச் சேர்ந்தவர் களோடு அழிந்து போவாய்'' என்றார்.



# செய்திச் சுடர்

## நோயை விடக்கொடியது!

டில்லியில் உள்ள தேசிய மருந்து உபயோகிப்போர் கழகம் உலக ஆரோக்கிய அமைப்பின் ஆதரவில் இந்தியர்களிடையே மருந்து மாத்திரைகள் உட்கொள்ளும் பழக்கம் பற்றிய ஆய்வை நடத்தியது. இதில் திடுக்கிடச் செய்யும் மக்கள் தம் நோயைத் தாமே போக விடாமலும்



உடலின் நோயை எதிர்க்கும் சக்தியை நம்பாமலும் டாக்டர்கள் சில சமயங்களில் நோயைவிட ஆபத்தை விளைவிக்கும்.

## ஆபாசத்திற்கு மாணவர்களின் எதிர்ப்பு

அண்மையில் ஒரு பத்திரிகை புகழ்பெற்ற ஒரு எழுத்தாளர் எழுதியதில் ஆபாசமான ஒரு பகுதியை வெளியிட்டது. சண்டிகரிலுள்ள ஜி.சி.ஜி.யில் இளம் கலை வகுப்பில் படிக்கும் மாணவர்கள் ஒன்று கூடி தம் எதிர்ப்பை அப்பத்திரிகையின் ஆசிரியருக்குத் தெரிவித்தார்கள்.



## நாய் பூனையை மிஞ்சுகிறது!

பூனைக்கு ஒன்பது வாழ்வுகள் உண்டென்க்கருதப்படுகிறது. அதாவது அவை எளிதில் இறப்பதில்லை. இது உண்மையோ பொய்யோ தெரியாது எனினும் போயினும் இரு நாய்கள்



இதைப் பொய்ப்பித்து விட்டன. டெய்வானில் ஒரு பயங்கர பூகம்பம் ஏற்பட்டு பலர் இறந்தனர். ஆனால் இதற்கு 437 மணி நேரத்திற்குப் பிறகு இரு நாய்கள் இடிபாடுகளிலிருந்து உயிரோடு மீட்கப்பட்டன. அவை ஒரு நாற்காலியால் அந்த இடிபாட்டில் காக்கப்பட்டன.

அம்புலிமாமா
அனுபந்தம்
113



நம் நாட்டுக் கண்கவர் காட்சிகள்

# கஜிரங்கா தேசீயப் பூங்கா



ஒற்றைத் கொம்புள்ள காண்டா மிருகங்களுள்ள பகுதி கஜிரங்கா தேசியப் பூங்கா இது நம் நாட்டில் வட கிழக்குப் பகுதியில் அஸ்ஸாம் மாநிலத்தில் பிரம்மபுத்திரா நதிப் பள்ளத்தாக்கில் கர்ச் அங்க்லாங்க் மலை அடிவாரத்தில் உள்ளது. இதன் பரப்பளவு 430 சதுர கிலோ மீட்டர்.

ஒரு காலத்தில் வட இந்தியா முழுவதிலும் காண்டா மிருகங்கள் இருந்தன். அவை நாளுக்கு நாள் குறைந்து 1908ல் அவற்றின் எண்ணிக்கை 12க்கு வந்து விட்டது. அழிந்து வரும் இந்த மிருக இனத்தைக் காப்பாற்ற 1926ல் இந்த தேசீயப் பூங்கா அமைக்கப் பட்டது. இதில் இப்போது 1600 காண்டா மிருகங்கள் உள்ளன.

நம் நாட்டு காண்டா மிருகம் 5.5 அடி உயரம் இருக்கும் நிறை 1800 கி.கிராம். ஆப்பிரிக்கக் காண்டா மிருகம்தான் மிகப் பெரியது. சுமத்ரா காண்டா மிருகம் யாவற்றிலும் சிறியது 4.5 அடி உயரமும் 1000 கி.கிராம் நிறையும் இவை கொண்டிருக் கும். ஜாவா காண்டா மிருகம் மிக அரிது.

கஜிரங்கா சரணாலயத்தின் பெரும் பகுதி சமதளப் பரப்பில் அமைந்துள்ளது. ஆங்காங்கு வேலிகளும் பழ மரங்களும் இப்பகுதியில் உள்ளன. இயற்கை அழகில் உயர்ந்து விளங்கும் இச்சரணாலயத்தைக் காண ஆயிரக் கணக்கில் சுற்றுலாப் பயணிகள் வருகிறார்கள்.

# புரூரவர்

பல யாகங்களைச் செய்து தேவர்களைத் திருப்திப்படுத்தியவர் மன்னர் புரூரவர். அவர் அவ்வப் போது தேவலோகத்திற்கும் போய் வந்து கொண்டிருந்தார். ஒருநாள் அவர் தேவலோகத்திற்குப் போய்க் கொண்டிருக்கையில் பெண்கள் கூக்குரலிடுவது அவர் காதில் விழுந்தது. குரல் வந்த திசையில் போய்ப் பார்க்கவே ஊர்வசியையும் சித்திரலேகாவையும் கேசி என்ற ராட்சஸன் தூக்கிக் கொண்டு போய்க் கொண்டிருந்தான். புரூரவர் அந்த அரக்கனை அடித்துத் துரத்தி அந்த இரு அப்சரப் பெண்களை மீட்டு தேவலோகத்தில் கொண்டு போய்ச் சேர்த்தார்.

சிறிது காலத்திற்குப் பின் ஒரு முனிவரின் சாபத்தால் ஊர்வசி மானிடப் பெண்ணாக பூவுலகில் பிறக்க வேண்டியதாயிற்று. அவள் புரூரவரைக் காண வரவே அவர் அவளது அழகில் மயங்கி அவளை மணக்க விரும்புவதாகக் கூறினார். அதற்கு அவள் ஒரு நிபந்தனையை விதித்தாள். தன்னிடமுள்ள இரு மான் குட்டிகளை அவர் பாதுகாத்து வர வேண்டுமென்றும் அதுவரை அவரோடு வாழ்வதாயும் மான் குட்டிகளை என்று அவரால் காக்க முடியாமல் போகிறதோ அன்று அவரை விட்டுப் பிரிந்து போய் விடுவதாகவும் அவள் தன் நிபந்தனையைக் கூறவே புரூரவரும் அதற்குச் சம்மதித்து அவளை மணந்து கொண்டார்.

இருவரும் சந்தோஷமாகக் காலம் கழித்து வருகையில் ஊர்வசியின் சாப காலம் முடியும் தருணம் வந்தது. தேவலோகத்தவர் நீண்ட காலம் ஊர்வசியை விட்டுப் பிரிந்திருந்ததால் அவளது நடனத்தைக் காணத் துடித்துக் கொண்டிருந்தனர். எனவே பூவுலகிலிருந்து அவளது மான் குட்டிகளை புரூரவமன்னுக்குத் தெரியாமல் அவர்கள் திருடிக் கொண்டு சென்றனர். அப்போது சட்டெனக் கண் விழித்த புரூரவர் சிலர் மான் குட்டிகளைத் திருடிக் கொண்டு போவது கண்டு அவர்களைப் பிடிக்கத் துரத்திச் சென்றார். ஆனால் அவரால் முடியவில்லை. அவர் நிபந்தனைப்படி நடக்காததால் ஊர்வசி அவரை விட்டுப் பிரிந்து சென்றாள்.

ஊர்வசி சென்றபின் புரூரவர் பைத்தியக்காரர் போலானார். அது கண்டு தேவர்கள் பரிதாபப்பட்டார்கள். ஆண்டுக்கு ஒருமுறை ஊர்வசியை புரூரவர் சந்திக்க வரம் அளித்தார்கள். இதனால் புரூரவர் முன் போல மகிழ்ச்சியுடன் இருக்கலானார்.

ஊர்வசி - புரூரவர் கதை பற்றி பல அர்த்தங்கள் மறைந்திருப்பதாகப் பண்டிதர்கள் கூறுகிறார்கள். இதன் அடிப்படையில் பல காவியங்களும் நாடகங்களும் படைக்கப்பட்டுள்ளன.



## உங்களுக்கு தெரியுமா?

### கோசக்குகள்



பல நூற்றாண்டுகளுக்கு முன் ஆசியக் கண்டத்தின் பெரும் மைதானப் பகுதிகளிலிருந்தும் சமவெளிகளிலிருந்தும், மலைப் பகுதிகளிலிருந்தும் பல சாதி மக்கள் ரஷ்யாவிற்குப் போய் அங்கு வசிக்கலானார்கள். இவ்வாறு சென்ற கோசக்குகள் கருங்கடல் பக்கம் ஆஜோன் கடலில் டான் நதி சேருமிடத்தில் குடி புகுந்தார்கள். இவர்கள் மிக வலுவான ஒரு வகைக் குதிரைகளை வளர்ப்பதில் கை தேர்ந்தவர்கள். குதிரை சவாரி செய்வதில் நிபுணர்கள். இராணுவத்தில் குதிரைப் படைப் பகுதியில் இவர்களே அதிகமாய் இருப்பவர்கள். இசைக் குழுக்கள் அமைத்து இன்னிசைக் கச்சேரிகள் செய்வதிலும் இவர்கள் பெயர் பெற்றவர்கள்.

## வானவில்

### வேப்ப மரம்

நம்நாட்டில் குறிப்பாகத் தென்னகத்தில் வேப்பிலையை மதச் சடங்குகளில் பயன் படுத்துகிறார்கள். கண் பார்வையை வேப்பிலை சரி செய்து விடுமென நம் பெரியோர்கள் கூறுகிறார்கள். இதை இக்கால மருத்துவ பரிசோதனைகள் மெய்ப்பித்துள்ளன. வேப்பிலை வாசனை அதன் சாறு பல வியாதிகளை குணப்படுத்துகின்றன. கிருமிகளை அழிக்கின்றன. வேப்பமரத்தின் வேர், பட்டைகளிலிருந்து கஷாயம் தயாரித்து காய்ச்சலைப் போக்க மருந்தாகப் பயன்படுத்துகிறார்கள். வேப்பங் கொழுந்து தாய்மார்களுக்கும் குழந்தைகளுக்கும் நல்ல மருந்தாகும். எனவே வேப்ப மரத்தை மனிதனுக்கு வாழ்வு அளிக்கும் மரம் எனக் கூறினால் அது மிகையாகாது.



# முதலாவது சுதந்திரப் போர்



*(கிழக்கிந்தியக் கம்பெனிக்கு எதிராக நாடெங்கிலும் கலகங்கள் மூண்டன. முதன் முதலில் சிப்பாய்கள் கலகத்தை ஆரம்பித்த போதிலும் பிறகு சிற்றரசர்களும் பிரமுகர்களும் பொது மக்களும் ஆங்காங்கு கலகங்கள் புரியலாயினர். நானாசாகப், ஜான்ஸி ராணி லக்ஷ்மி பாய் ஆகியோர் இக்கலகங்களுக்கு தலைமை ஏற்று நடத்தினார்கள். ஜான்ஸி கோட்டையை முற்றுகையிட்ட ஆங்கிலப் படைகள் ஒருபுறம் கோட்டையைத் தாக்கி மறுபுறம் அங்குள்ள வெடி மருந்துசேமிப்புக் கிடங்கை அழித்தன. அதன் பிறகு–)*

சர் ஹ்யூரோஜ் தலைமையில் ஜான்ஸி கோட்டையில் கிழக்குப் பகுதியிலிருந்த வெடி மருந்து சேமிப்புக்கிடங்கு தகர்த்து அழிக்கப்பட்டது. ஆயினும் கோட்டையினுள்ளிருந்த வீரர்களும், பொது மக்களும், ஆண்களும் பெண்களுமாய் ஆங்கிலப் படை வீரர்களை எதிர்த்துப் போராடலானார்கள். கோட்டை மதில் மீது ஏறி வந்த நான்கு ஆங்கில வீரர்களை அவர்கள் கீழே தள்ளிக் கொன்றனர்.

கோட்டைக்குள்ளிருந்த குடி நீர்க் கிணற்றை ஆங்கிலப் படை குண்டுகளால் தகர்த்து மூடி விட்டது. கோட்டையினுள்ளிருந்த மற்றொரு கிணறும் வரண்டு போயிற்று. அரண்மனையின் ஒரு பெரிய அறைக்குள் கங்கை நீர் சில பெரிய குடங்களில் அடைத்து வைக்கப்பட்டிருந்தது.

வேறு எந்த வழியும் இல்லாது

போகவே ராணி லக்ஷ்மி பாய் அந்த அறையின் கதவைத் திறந்து ''இங்கு குடங்களிலுள்ள கங்கை நீர் இறக்கும் தருணத்தில் இருப்பவர்களின் வாயில் ஊற்றுவதற்காகப் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இப்போது நமக்கு நீர் கிடைக்காததால் இதனை இப்போது குடித்துப்பிறகுஎதிரிகளுடன்போராடி வீர சொர்க்கத்தை அடைவோம்'' எனக் கூறி அக்குடங்களிலுள்ள நீரை யாவரும் குடிக்கக் கொடுத்தாள்.

கோட்டை மதில் மீது ஏறிய நான்கு ஆங்கில சிப்பாய்கள் கீழே தள்ளப் பட்டு மரணமுற்றது கண்டு ஆங்கிலப் படை வீரர்கள் பயந்து போயினர். அன்றிரவு ஆங்கில இராணுவ முகா மில் போர் நிலை பற்றி படைத் தலைவர்கள் கலந்து பேசி எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் பற்றி யோசிக்கலானார்கள்.

எல்லோருடைய கருத்துக்களை யும் கேட்டபின் சர்ஹ்யூரோஜ் அவர் களிடம் ''இப்போது நாம் நம்முடைய திறமை மிக்க பல வீரர்களை இழந்து விட்டோம். ஒரு ஜான்ஸி நம் வீரர் களில் இவ்வளவு பேர்களை பலி கொண்டு விட்டதென்றால் நாட்டில் பல இடங்களில் நடந்து வரும் கலகங் களை நாம் எவ்வாறு அடக்கப் போகி றோம்? ஜான்ஸியில் நமக்குக் கிடைக் கும் வெற்றி தோல்விகளின் அடிப் படையில்தான் இந்தியாவில் நம் கம்பெனியின் எதிர்காலமே தீர்மானிக் கப்படும். நாளையே நாம் ஜான்ஸிக் கோட்டைக்குள் நுழைய வேண்டும். மிக முக்கியமான விஷயம் என்ன வென்றால் ஜான்ஸி ராணியை உயி ருடன் பிடிக்க வேண்டும். அவளை



யாரும் கொன்று விடக் கூடாது. அவளைச் சிறைப் பிடிக்கையில் அவளுக்கு சிறு காயங்கள் ஏற்பட லாம். அது பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவளை உயிருடன் பிடிப்பதுதான் முக்கியம். அவள் தன் தவறுகளை ஒப்புக் கொண்டு என்னி டம் மன்னிப்பு கேட்க வேண்டும். மண்டியிட்டு உயிர்ப் பிச்சை கேட்க வேண்டும். இது மற்ற கலகக்காரர் களுக்கு ஒரு எச்சரிக்கையாயும் தக்க பாடமாயும் அமைய வேண்டும்'' என்றான்.

இதே சமயம் ஜான்ஸி கோட்டைக் குள் ஜான்ஸி ராணி போரில் காய முற்ற தன் படை வீரர்களுக்கு சிகிச்சை செய்து கொண்டிருந்தாள். அப்போது ஒரு பிரமுகர் அங்கு வந்து அவளை வணங்கி ''தாயே. இப்போது தாம



திக்க நேரமில்லை. நாளைக் காலை யில் ஆங்கிலப் படை நம் கோட்டைக் குள் நுழையப் போகிறதாம். இப் போது நம்மிடம் துப்பாக்கி குண்டு களும், பீரங்கி வெடி மருந்தும் இல்லை. அதனால் ஆங்கிலப் படையை நம்மால் வெல்ல முடியாது. இதுவரை நம் நாட்டில் எந்த மன்னனோ, ராணியோ செய்ய முடி யாத செயலை நீங்கள் செய்திருக்கிறீர் கள். எனவே நீங்கள் எதிரிகளிடம் அகப்படாமல் தப்பிப் போய் விட வேண்டும்'' என்றார்.

லக்ஷ்மி பாயும் ''என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள நான் தப்பி ஓட வேண்டுமா? நீங்கள் விரும்புகிறீர் களா?'' என்று கேட்டாள். அவரும் ''தாயே. இது அல்ல என் நோக்கம். உங்களைப் போன்றவர்கள் இதுவரை பிறந்ததும் இல்லை. இனிப் பிறக்கப் போவதும் இல்லை. நீங்கள் மரணத் திற்கு அஞ்ச மாட்டீர்களென்பது எங் களுக்குத் தெரியும். ஆனால் இந்த ஆங்கிலேயர்கள் மிகவும் கொடியவர் கள். இவர்கள் உங்களைச் சிறைப் பிடித்தால் எப்படியெல்லாம் அவ மானப்படுத்துவார்களோ என்றுதான் அஞ்சுகிறோம்'' என்றார்.

அது கேட்டு லக்ஷ்மி பாய் கொஞ்ச நேரம் யோசித்தாள். பிறகு அவள் ''ஆம். நீங்கள் சொல்வது உண் மையே. நான் இங்கிருந்து தப்பி ஓடு வதுதான் நல்லது. அப்போதுதான் மற்ற இடங்களில் நடக்கும் போராட் டங்களைச் சீரமைக்க முடியும்'' என் றாள். அப்போது சிலர் ''நானா சாகாப் பும் தாந்தியா தோபியும் சரியான சம யத்தில் வந்து சேர்ந்திருந்தால் நாம் இந்த நிலைமைக்குத் தள்ளப்பட்டி ருக்க மாட்டோம். நாங்கள் கடைசி மூச்சு இருக்கும் வரை ஜான்ஸியைக் காப்பாற்றப் போராடுவோம்'' என் றார்கள்.

உடனேயே ஜான்ஸி ராணி கோட்டையிலிருந்து தப்பி வெளி யேறுவதற்கான ஏற்பாடுகள் செய் யப்பட்டன. சிலர் முதலில் போய் ராணி போக வேண்டிய வழியில் ஆங் கிலப் படை வீரன் எவனும் இல்லை என்பதை உறுதி செய்து கொண்டார் கள். ராணி தன் வளர்ப்பு மகனான தாமோதரனை முதுகில் கட்டிச் சுமந்து கொண்டு இரு பணிப் பெண்களுடன் சில வீரர்கள் கூட வரக் குதிரை மீத மர்ந்து இருட்டில் ஜான்ஸிக் கோட் டையை விட்டுச் சென்றாள்.

திட்டமிட்டபடி மறுநாள் காலை

ஆங்கிலப் படைகள் ஜான்ஸிக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டு உள்ளே போக முயன்றன. கோட்டைக்குள் இருந்தவர்கள் கடுமையாக எதிர்க்கவே அது கண்டு ஆங்கிலேயர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஒரு வாலிபன் கோட்டை மதில் மீதிருந்து கீழே நின்ற ஒரு ஆங்கிலப் படைத் தளபதியின் தோளின் மீது குதித்து அவனைத் தன் வாளால் குத்திக் கொன்றான். உடனே அங்கிருந்த ஆங்கில வீரர்கள் தம் துப்பாக்கிகளால் அந்த வாலிபனைக் சுட்டுக் கொன்றார்கள்.

அதன்பின் சில ஆங்கில வீரர்கள் கோட்டை மதில் மீது ஏறி உள்ளே குதித்துக் கோட்டைக் கதவைத் திறந்து விட்டனர். ஆங்கிலப் படை வீரர்கள் மளமளவென்று கோட்டைக்குள் புகுந்து கண்டபடி துப்பாக்கிச் சூடு நடத்தினார்கள். குண்டடிபட்ட பெண் ஒருத்தி வேகமாக ஓடிவந்து ஆங்கில வீரர்களின் முகத்தில் காறித் துப்பினாள். இதனால் ஆத்திரப்பட்ட ஆங்கில சிப்பாய்கள் தம் துப்பாக்கி குண்டுகளால் அவளது உடலைத் துளைத்து விட்டனர்.

ஒரு ஆங்கில வீரன் ஒரு கிழவரைச் சுடத் தன் துப்பாக்கியால் குறி வைத்தான். ஆனால் அக் கிழவர் தன் மீது அந்தப் துப்பாக்கியின் குண்டு தாக்கு முன் சட்டென அந்த வீரனின் மீது பாய்ந்து அவனது கழுத்தைப் பிடித்து நெறித்துக் கொன்று விட்டார். கோட்டைக்குள்ளிருந்த மக்கள் தம் கையில் கிடைத்த கல், தடி போன்ற பொருள்களை எடுத்து ஆங்கில வீரர்களைத் தாக்கி வீழ்த்தலானார்கள்.

ஆங்கிலப் படை வீரர்கள் கோட்



டைக்குள் மக்களைச் சுட்டு வீழ்த்தினார்கள். பலர் இறந்தனர். சிலர் காயப்பட்டார்கள். வேறு சிலர் சிறைப்பட்டனர். அவர்களிடம் ஆங்கில வீரர்கள் ''எங்கே இருக்கிறாள் உங்கள் ராணி'' என்று அதட்டி மிரட்டிக் கேட்டார்கள் அவர்களோ ''உங்களையெல்லர்ம் புதைக்க குழிகளை தோண்டப் போயிருக்கிறார்கள்'' என்று ஏளனமாகச் சிரித்தவாறே கூறினார்கள். அதைக் கேட்டபின் ஆங்கில சிப்பாய்கள் சும்மாவா இருப்பார்கள்? அங்கிருந்த எல்லோரையும் சுட்டுக் கொன்றார்கள். அப்போதும் அவர்கள் திருப்தி அடையவில்லை.

அவர்களுக்கு ராணி கிடைக்கவில்லையே என்ற ஆத்திரமே ஏற்பட்டது. அவர்கள் கோட்டையின் மூலை மூடுக்குகளிலெல்லாம் தேடி

னார்கள். ஒவ்வொரு பெரிய பெட்டியையும் திறந்து பார்த்தார்கள். பெரிய மூட்டைகளைக் குத்தியும் அவிழ்த்தும் பார்த்தார்கள். ஒரு ஆங்கில சிப்பாயோ ராணி கிணற்றுக்குள் ஒளிந்து கொண்டிருப்பாளோ என்று எண்ணி அதில் இறங்கினான். ஆனால் அக்கிணற்றிலிருந்த ஒரு பாம்பு அவனைத் தீண்டவே அவன் இறந்து போனான்.

ராணி கிடைக்கவில்லையே என்ற ஆத்திரமடைந்து ஆங்கிலப் படை நகர மக்களைப் பல விதத்திலும் துன்புறுத்தலாயிற்று. பலரைக் கொன்றது. கிழவர்கள், குழந்தைகள் என்றெல்லாம் இரக்கப்படவில்லை. வீடுகளையெல்லாம் கொள்ளை அடித்தார்கள். பல வீடுகளை எரித்துச் சாம்பலாக்கினார்கள்.

அந்த இருட்டான இரவு வேளையில்தான் ராணி லக்ஷ்மிபாய் கால்பிக்குக் கிளம்பிச் சென்றாள். ஜான்ஸிக் கோட்டைக்குச் சற்று தூரத்தில் ஜன நடமாட்டமே இல்லாத ஒரு பகுதியில் ஒரு பெரிய மாளிகையில் போகர் என்ற படைத் தலைவன் தங்கி இருந்தான். அவன் அந்த இரவு வேளையில் தன் மாளிகையிலிருந்து வெளியே பார்த்த போது ஒரு குதிரை மீதமர்ந்து யாரோ வேகமாகப் போய்க் கொண்டிருப்பதைக் கண்டான். அப்படிப் போவது ராணி லக்ஷ்மிபாயாகத்தான் இருக்க வேண்டுமென்று அவன் சந்தேகித்து அவளைப் பிடித்துக் கொடுத்தால் தனக்குப் பெரும் தொகை பரிசாகக் கிடைக்கும் என்று எண்ணி அவன் அவளைப் பிடிக்கத் தீர்மானித்தான்.

அவன் சில வீரர்களைத் தன் பின்னால் வரச் சொல்லி விட்டு குதிரை மீதுமர்ந்து ஓடும் ராணியைத் துரத்திச் சென்றான். சற்று நேரத்தில் ராணியை அணுகி ''நில்'' என்று அவன் கத்தினான்.

ராணி சட்டெனத் தன் குதிரையைத் திரும்பி போகரை திடீரென்று தாக்கினாள். தன் வாளால் அவனை ஒரே வெட்டில் வெட்டிக் கீழே வீழ்த்தி விட்டுத் தன் வழியே வேகமாகச் சென்று விட்டாள். போகரின் பின்னால் வந்த வீரர்கள் தம் தலைவன் வெட்டுண்டு கீழே கிடப்பது கண்டு திகைத்து அவனது உடலைத் தூக்கிச் சென்றார்கள்.

**(தொடரும்)**





# தம்பியின் ஆட்சி

மந்தரகிரியை ஆண்ட மலயகேது இறக்கு முன் தன் இரு புதல்வர்களையும் அழைத்து ''என் தந்தையும் பாட்டனாரும் நாட்டை ஆள அபூர்வ சக்திகளைப் பெற வேண்டுமென்றும் அவற்றைப் பெற இங்கிருந்து ஐம்பது கல் தொலைவிலுள்ள காட்டிலுள்ள காளி கோவிலுக்குப் போக வேண்டுமென்றும் சொன்னார்கள். அங்கு அம்மனின் பாதங்களின் கீழ் குங்குமச் சிமிழ் வடிவில் ஒரு முளை இருக்கிறதாம். அதைப் பிடித்துத் திருகினால் அங்கு கீழேயுள்ள சுரங்க மாளிகையைக் காணலாம். அதில் மந்திரிக்கப் பட்ட அரிசியும், விருந்து சாப்பாட்டை அளித்துக் கொண்டே இருக்கும் ஒரு அட்சய பாத்திரமும் உள்ளன. அந்த அரிசியை எடுத்து வந்து காளி தேவியைப் பிரார்த்தித்து நிலத்தில் போட்டால் பல வீரர்கள் கொண்ட படைகள் வருமாம். அவற்றைக் கொண்டு நம் நாட்டை விஸ்தரியுங்கள். அட்சய பாத்திரம் மக்களின் பசியைப் போக்கும். நம் நாட்டில் மழை பெய்யாவிட்டால் காளி தேவியின் கையிலுள்ள வாளை எடுத்து வந்தால் நாட்டில் நன்கு மழை பெய்யும்'' என்றான்.

அப்போது அந்த இரு புதல்வர்களும் ''தந்தையே! இவற்றை எல்லாம் நீங்கள் ஆட்சி புரிகையில் ஏன் செய்யவில்லை?'' என்று கேட்டனர். அதற்கு மலயகேது ''இவற்றைச் செய்ய எனக்கு மனோபலமும் இல்லை. உடல் பலமும் இல்லை. அதனால் தான் நான் அந்த அபூர்வ சக்திகளை அடைய முடியவில்லை. நீங்களாவது அவற்றை அடைந்து நாட்டை நன்கு ஆட்சி புரிந்து வாருங்கள்'' என்று கூறி விட்டு இறந்து போனான்.

மலயகேதுவிற்குப் பின் அவனது மூத்த மகன் நாட்டின் மன்னனானான். அவனது ஆட்சியின் ஆரம்பத்தில் நாட்டில் மழை பெய்யாமல் பஞ்சம் ஏற்பட்டது. பட்டினிச் சாவுகள் நாளுக்கு

—சங்கர சுவாமிநாதன்—



நாள் அதிகரிக்கலாயின. இம்மாதிரி வேளைகளில் பஞ்ச பூதம் என்ற ராட்சஸி பிறந்து மழை பெய்யும் வரை நாட்டில் திரிந்து விட்டு மழை பெய்ததும் மறைந்து விடுகிறாள் என்பது அந்நாட்டு மக்களின் நம்பிக்கை.

மன்னனான மூத்த மகன் மந்திரிகளுடன் ஆலோசனை நடத்தினான். அவர்களிடம் அவன் தன் தந்தை இறக்குமுன் கூறிய அதிசயச் சக்திகளைப் பற்றிக் கூறினான். அமைச்சர்களும் ''அப்படியானால் காட்டிலுள்ள கோவிலிலிருந்து மந்திரவாளை எடுத்து வாருங்கள்'' எனக் கூறவே அவனும் காட்டிலுள்ள காளி கோவிலுக்குப் போய் காளியின் கையிலுள்ள வாளை எடுத்து வந்து மழை பெய்யச் செய்வது என்று தீர்மானித்தான்.

அவன் படை வீரர்களுடன் காளி கோவிலுக்குப் புறப்படும் போது அவனது தம்பி ''நானும் உனக்குத் துணையாகக் கூட வருகிறேனே'' என்றான். அண்ணனோ கேலியாகச் சிரித்து ''எனக்கு அங்கு போக வழி தெரியும். குதிரை சவாரி செய்யவும் தெரியும். என் கூட நூறு வீரர்கள் வேறு வருகிறார்கள்'' என்று கூறி விட்டுப் புறப்பட்டுச் சென்றான்.

அவன் காட்டில் முக்கால் பகுதி தூரம் சென்ற பின் பஞ்ச பூத ராட்சஸி சுழல் காற்று வடிவில் வந்து வழி மறைத்தாள். அவளது பேயாட்ட வேகத்தில் அங்கிருந்த மரங்கள் ஆடி அசைந்தன. அந்த ராட்சஸியைக் கண்ட படை வீரர்கள் அவள் மீது தம் ஈட்டிகளை எறிந்தார்கள். அம்புகளால் அவளைத் தாக்கினார்கள்.

ஆனால் ராட்சஸி அவற்றையெல்லாம் பயனற்றுப் போகச் செய்து மன்னனிடம் ''இப்படியெல்லாம் தாக்கி என்னை உன்னால் கொன்று விட முடியாது. காளி தேவியின் கையிலுள்ள சக்தி வாய்ந்த வாளை எடுத்து வந்தாலே என்னை அழிக்க முடியும். என்னை அழிக்க அந்த வாளை எடுத்து வரத்தானே நீ உன் படை வீரர்களுடன் போய்க் கொண்டிருக்கிறாய்? என்னை அழிக்க முயலும் உங்களை என்ன செய்கிறேன் பார்'' என்று கூறி பலமாக உப்பென்று ஊதினாள். மறுகணமே மன்னனும் அவனது படை வீரர்களும் ஆகாயத்தில் தூக்கி எறியப்பட்டு தலைநகரின் எல்லையில் போய் விழுந்தார்கள்.

இதைக் கண்ட மன்னனின் தம்பி ''என் அண்ணனால் காளி கோவிலை அணுகக்கூட முடியவில்லை. ஆனால்

நான் போய்ப் பார்க்கிறேன். எனக்குத் துணையாக யாரும் வரவேண்டாம்'' என்று கூறி தன்னந்தனியாக குதிரை மீதேறி காளி கோவிலை நோக்கிச் சென்றான். அவன் பகலில் காட்டு எல்லையில் இருந்து விட்டு இரவில் காட்டைக் கடந்து காளி கோவிலை அடைந்தான். அவன் இரவில் காட்டைக் கடக்கும் போது பஞ்சபூத ராட்சஸி நன்கு தூங்கிக் கொண்டிருந்தாள்.

அவன் காளி கோவிலின் முன்னால் இருந்த குளத்தில் குளித்து விட்டு கோவிலுக்குள் போய் காளி தேவியின் விக்கிரகத்தின் முன் பயபக்தியுடன் நின்றான். அதை வணங்கி அதன் கையிலிருந்து வாளை எடுத்துக் கொண்டு கோவிலிருந்து வெளியே வந்தான். மறு விநாடியே ஆகாயத்தில் கரு மேகங்கள் குவிந்தன. விடாது மழையும் பெய்தது அவன் கோவிலுக்குள் சென்று தான் எடுத்த வாளை மீண்டும் காளி தேவியின் கையில் வைத்து விட்டான்.

நாட்டிலுள்ள ஏரிகளும் குளங்களும் மழை பெய்ததால் நீர் நிரம்பியது. அந்த மழையில் நனைந்து பஞ்ச பூத ராட்சஸி கரைந்து போனாள்! மக்கள் மன்னனின் தம்பியை அவன் செய்த துணிகரச் செயலுக்காக வெகுவாகப் பாராட்டினார்கள். தன் தம்பி மக்களிடையே புகழ் பெற்றதை மன்னன் விரும்பவில்லை. தன் தம்பியை விட அரிய பெரிய செயல் எதையாவது செய்ய வேண்டுமென்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

அதனால் அவன் ஒருநாள் அரண்மனையிலிருந்து கிளம்பி காளி கோவிலுக்குச் சென்றான். உள்ளே போய்



காளிதேவியின் பாதங்களின் கீழுள்ள மூளையைத் திருகி சுரங்க மாளிகைக்குள் சென்றான். அங்கிருந்த அட்சய பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வெளியே வந்து அவன் தன் அரண்மனையை அடைந்தான்.

அவன் நாடெங்கிலும் ''மக்களே! இனி நீங்கள் வயல்களிலோ வேறு இடங்களிலோ வேலை செய்ய வேண்டியதே இல்லை. நீங்கள் உழைப்பது வயிறு நிறைய உண்பதற்குத்தானே. நான் அட்சய பாத்திரம் கொண்டு வந்திருக்கிறேன். அதைக் கொண்டு உணவு அளிக்கிறேன். நீங்கள் வேலை எதுவும் செய்யாமல் சாப்பிட்டு விட்டு சுகமாக இருக்கலாம். எல்லோரும் தினமும் சாப்பிட கோட்டைக்கு வந்து விடுங்கள்'' என்று பறை சாற்றுவித்தான்.



அப்போது முதல் கோட்டையில் எல்லோருக்கும் விருந்து சாப்பாடு கிடைக்கலாயிற்று. அதனால் மக்கள் வேலை எதுவும் செய்யாமல் சாப்பிட்டு விட்டுத் தூங்கலானார்கள். இதனால் மக்கள் முழுச் சோம்பேறிகளாகி விட்டார்கள்.

இந்நிலையில் மன்னன் ஒருநாள் சுற்றுப் பயணம் செய்து நாட்டில் வயல்களில் எதுவும் விளையாமலும் ஆடு மாடுகள் முற்றிலும் கவனிக்கப்படாமலும் நாடே பாழாகிப் போனது கண்டும் திடுக்கிட்டான். அவன் அமைச்சர்களைக்கூட்டி ஆலோசனை புரியவே அவர்களும் ''அரசே! நீங்கள் இவ்வாறு அறிவித்தது பெருந் தவறு. இந்த அட்சய பாத்திரத்தால் நாடு சீர் குலைந்து போயிற்று. மக்களில் அறிஞர்கள் உங்களை ஒரு பைத்தியம் எனக் கூறுகிறார்கள். நீங்கள் ஏதாவது ஒரு அரிய செயலைச் செய்து மக்களின் பாராட்டுதல்களைப் பெற முயலுங்கள். அதைச் செய்யாவிட்டால் நீங்கள் உங்கள் தம்பியை விடத் தாழ்ந்து போனவராகக் கருதப்படுவீர்கள்'' என்றனர்.

தன் தம்பியைப் பற்றி அமைச்சர்கள் குறிப்பிட்டதும் மன்னன் எரிச்சலே அடைந்தான். அதனால் அட்சய பாத்திரத்தை எடுத்துக்கொண்டு சுரங்க மாளிகைக்குப் போய் அதை அங்கு வைத்து விட்டு அவன் மந்திர அரிசியை எடுத்து வந்தான். அதைத் தரை மீது போடவே, உடனே ஆயிரக்கணக்கில் வீரர்கள் தோன்றினார்கள்.

மன்னன் அமைச்சர்களைக் கூட்டி ''நான் இந்த வீரர்களடங்கிய பெரிய படை கொண்டு பல நாடுகளை வெல்ல நினைக்கிறேன். அதனால் நான் சக்கரவர்த்தி என்ற பெயர் பெறுவேன். நம் பொக்கிஷமும் நிறைந்து வழியும். எனவே அண்டை நாடுகளின் மீது படை எடுத்துச் செல்வதற்கான திட்டங்கள் தீட்டிக் கொடுங்கள். இதனால் மக்கள் என் சக்தி எவ்வளவு எனவியந்து புகழ்வார்கள்'' என்றான்.

அமைச்சர்களுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை. ஆனால் என்ன செய்வது மன்னனது விருப்பம் அது. அதை எதிர்த்துப் பேச அவர்களால் முடியவில்லை அதனால் மன்னண் கூறிய படி நடந்தார்கள்.

பத்து நாட்களில் படை எடுக்கத் திட்டம் தீட்டப்பட்டது. ஆனால் அதற்குள் படை வீரர்களுக்கு உணவளித்ததில் பொக்கிஷத்தில் இருந்த பணம் எல்லாம் காலியாகி விட்டது. மன்னன்

தலையைப் பிய்த்துக் கொண்டு என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கையில் புதிதாக வந்த படை வீரர்களெல்லாம் அரிசியாக மாறிப் போனார்கள். இதனால் மன்னனுக்கு பைத்தியமே பிடித்து விடும் போலாகி விட்டது.

அப்போது அவன் ''எனக்கு இந்த நாடும் வேண்டாம். இந்தப் பிரச்சனைகளும் வேண்டாம். ஆட்சிப் பொறுப்பை என் தம்பியிடம் ஒப்படைத்து விடுகிறேன் அவனே ஆட்சி புரியட்டும்'' எனத் தன் அமைச்சர்களிடம் கூறி விட்டுத் தன் கேளிக்கை மாளிகைக்குச் சென்று விட்டான்.

அமைச்சர்களும் சேனாதிபதியும் மன்னனின் தம்பியிடம் போய் நிலைமையை விளக்கி ''நீங்கள் சுரங்க மாளிகைக்குப் போய் அட்சயபாத்திரத்தை எடுத்து வந்து எல்லோருக்கும் உணவு அளியுங்கள். உங்கள் தமையன் எண்ணியபடி நீங்களும் மந்திர அரிசியைத் தெளித்து பெரும் படையை உருவாக்கி பிற நாடுகளை வெல்லுங்கள்'' என்றனர்.

அதற்கு தம்பி சம்மதிக்காமல் ''இப்போது பிரச்சனை பிற நாடுகளை வென்று நான் சக்கரவர்த்தி ஆக வேண்டும் என்பதல்ல. அட்சய பாத்திரத்தால் மக்கள் தம் தொழில்களைச் செய்யாமல் சோம்பேறிகளாகி விட்டார்கள். அவர்கள் மீண்டும் தம் தொழில்களைச் செய்ய வேண்டுமென்று கட்டளை பிறப்பிக்க வேண்டும். இப்போதைக்கு காளிதேவியின் வாளோ அட்சயபாத்திரமோ நமக்கு வேண்டாம். தேவைப்படும் போது அவற்றைப் பயன்படுத்திக் கொள்வோம்'' என்றான்.

அது கேட்டு அவர்கள் மகிழ்ந்து அவன் கூறியபடியே மக்கள் யாவரும் தம் தொழில்களைச் செய்ய வேண்டுமென்றும், அப்படிச் செய்யா விட்டால் கடும் தண்டனை விதிக்கப்பட்டு சிறைச்சாலைக்குள் தள்ளப்படுவார்கள் என்றும் நாடெங்கிலும் பறை சாற்றி அறிவிக்கப்பட்டது. அரச கட்டளை என்றதும் மக்கள் பயந்து தம் தொழில்களைச் செய்யலானார்கள். நாட்டில் மக்கள் சுறுசுறுப்புடன் தம் தொழில்களைச் செய்து வரலானார்கள். அதனால் நாடு செழித்தது. மன்னனது தம்பியின் ஆட்சியில் மக்கள் சுக வாழ்வு வாழ்ந்தனர்.



# போட்டோ வாக்கியப் போட்டி : பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் பிப்ரவரி 2000 இதழில் வெளியிடப்படும்.







★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ டிசம்பர 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை - 600 0026.**

## பிப்ரவரி/மார்ச் 1998 மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **ஆழ்ந்த சிந்தனையால் அறிவு வளரும்.**

*இரண்டாவது போட்டோ* : **தேர்ந்த நடனத்தால் அழகு மிளிரும்.**

*பரிசு பெற்றவர்* : **த.கு.பா. பட்டுதுரை, சிதம்பரம் - 605 001.**

